## (1) ஊடகங்கள், அரசியல், விவாதங்கள்

**சமீபத்திய அரசியல் நிகழ்வுகளில் நீங்கள் பெரும்பாலும் மௌனம் சாதிக்கிறீர்களே ஏன்? உங்கள் கருத்துக்களை ஏன் எழுதுவதில்லை?**

பொதுவாக ஊடகச் செய்திகளை நம்பி அரசியல் சமூகப்பிரச்சினைகளை அலசுவதில் எனக்கு முற்றிலும் நம்பிக்கை கிடையாது, ஏன் என்றால் எனக்கு ஊடகவியலாளர்களிடம் நெருக்கமான தொடர்புகள் பலவருடங்களாக உண்டு. அவர்கள் எப்படிச் செய்திசேகரிக்கிறார்கள், எப்படிச் செய்திகளை உண்டு பண்ணுகிறார்கள், எந்தெந்தச் சூழல்களில் செய்திகளை வெளியிடுகிறார்கள் என்று நான் நன்றாகவே அறிவேன். ஊடகம் எதுவானாலும் அவற்றின் நம்பகத்தன்மை கால்பங்குதான்.

ஒட்டுமொத்தமாக ஊடகங்கள் என்பவை பல்வேறு சக்திகளால் இயக்கப்படும் ஒரு பெரும் கருத்துத்தரப்பு என்று சொல்லலாம். ஊடகங்களின் கருத்துநிலையை உருவாக்கும் நான்கு சக்திகள் இவை.

**அ. அரசியல்.**

ஊடகங்கள் பல்வேறு அரசியல்கட்சிகளின் சார்புநிலைகளைக் கொண்டிருக்கின்றன என்பதை நம் அறிவோம். இவற்றில் இரண்டுவகை உண்டு . அதிகாரபூர்வமான கட்சி ஊடகங்கள். தற்காலிகமாகவும் மறைமுகமாகவும் கட்சிகளை ஆதரிக்கும் ஊடகங்கள். சன் டிவியும் ஜெயா டிவியும் முதல்வகைக்கு உதாரணம் என்றால் ராஜ் டிவி இரண்டாம் வகைக்கு உதாரணம். இவை செய்திகளை தங்கள் அரசியல் தேவைக்கு ஏற்ப பயன்படுத்துகின்றன

**ஆ. உரிமையாளர் நலன்**

ஊடகங்களின் கருத்துக்களைத் தீர்மானிப்பதில் அவ்வூடகங்களின் உரிமையாளர்களின் தனிப்பட்ட நலன்கள் வகிக்கும் பங்கும் மிக முக்கியமானது.பெரும்பாலான ஊடகமுதலாளிகள் வேறு பல தொழில்களில் பெரும் முதலீடுசெய்திருப்பவர்கள். அவர்களுக்கு அங்கே போட்டியாளர்களும் எதிரிகளும் உண்டு. அரசாங்கத்தில் அவர்களுக்கு

‘லாபி’ கள் உண்டு. ஆகவே அந்த நலன்களுக்குச் சாதகமாகவே அவர்கள் செய்திகளை உருவாக்குகிறார்கள்.

### இ. ஊடகவியலாளர்களின் நோக்கு

ஊடகங்களில் செயல்படுபவர்களின் தனிப்பட்ட விருப்பங்களும் வெறுப்புகளும் நோக்கங்களும் செய்திகளை பெருமளவில் பாதிக்கின்றன ஊடகவியலாளர்களின் நிலைபாடுகளைத் தீர்மானிக்கும் அம்சங்கள் பல. அவர்களின் இயல்பான அரசியல் நிலைபாடு முதல்வகையானது. ஆனால் அத்தகைய உறுதியான நிலைபாடு கொண்ட ஊடகவியலாளர்கள் மிக மிகக் குறைவே.

இரண்டாவதாகச் சொல்லப்பட வேண்டியது , அரசியல் சரிநிலை என்பதாகும்.[ பொலிடிகல் கரெக்ட்நெஸ்] ஒரு காலகட்டத்தில் ஒரு ‘ஜனநாயக, முற்போக்கு,மனிதாபிமான’ அரசியல் நிலைபாடு இப்படித்தான் இருக்கும் என்று ஒரு பொதுவான புரிதல் அறிவுச்சூழலில் உருவாகி நிலைபெற்றிருக்கும். அதுவே அரசியல்சரிநிலை என்று சொல்லப்படுகிறது. அது நெடுங்காலம் படிப்படியான அரசியல் பிரச்சாரம் மூலம் உருவாகி வருவதாகும். ஊடகவியலாளர்களில் பெரும்பாலானவர்களின் கண்ணோட்டங்களை தீர்மானிக்கும் அரசியல்சக்தி என்பது இதுவே. அரசியல்சரிகளை அப்படியே சொல்லிக்கொண்டிருக்கும் ஊடகவியலாளர்கள் எண்ணிக்கையில் மிக அதிகம்

மூன்றாவதாகச் சொல்லப்படவேண்டியது, வெளிப்பாதிப்புகள். ஊடகவியலாளர்களை பல்வேறுவகையில் பல அமைப்புகள் தங்களுடைய குரல்களை ஒலிக்கவைக்க பயன்படுத்திக் கொள்கின்றன. இந்திய ஊடகவியலாளர்களின் ஊதியம் ஒப்புநோக்க மிகவும் குறைவு. ஒரு வெளிநாட்டுப்பயணமோ சில லட்சம் ரூபாயோ அவர்களை கவர்ந்துவிடும். அதன்பின் மெல்ல மெல்ல அவர்கள் அவர்கள் இன்னதன்றே அறியாத மறைமுகச் சக்திகளின் குரல்களாக ஆகிவிடுவார்கள்.

சமீபகாலமாக இந்தப்போக்கு ஊடகத்துறையில் மிக அதிகமாக உள்ளது. பல ஊடகவியலாளர்கள் பெரும் செல்வம் ஈட்டுகிறார்கள் என்ற புலம்பல் ஊடகவியலாளர் நடுவே கேட்கிறது. அவர்கள் தங்களைத்தாங்களே காட்டிக்கொடுக்க விரும்பாத காரணத்தால்தான் அவை வெளிவரவில்லை. ஆனால் வரும் காலங்களில் சிலர் அவற்றை துணிந்து எழுதக்கூடும்.

பிராந்திய மொழிகளில் உள்ள ஊடகவியலாளர்கள் ஆங்கில ஊடகவியலாளர்கள் பெறும் சம்பளத்தில் பத்தில் ஒருபங்கு ஊதியம் பெறுபவர்கள். வருமானத்துக்காக அரசியல்வாதிகள், தொழிலதிபர்கள், திரைப்படத்துறையினரின் இனாம்களை நம்பி வாழ்பவர்கள். ஆகவே தன்னம்பிக்கை இல்லாதவர்கள். இவர்களில் படிக்கும்பழக்கமுள்ளவர்கள் மிக மிகக் குறைவே. பெரும்பாலானவர்கள் பாமரர்கள் என்றே சொல்ல வேண்டும். இவர்கள் ஆங்கில ஊடகவியலாளர்களை நம்பி அவர்களை பிரதிஎடுப்பதையே தங்கள் செயல்பாடாகக் கொண்டிருக்கிறார்கள்.

### ஈ. வாசகர்களின் எதிர்பார்ப்பு

ஊடகங்கள் தங்கள் வாசகர்களின் எதிர்பார்ப்புகளுக்கு ஏற்ப செய்திகளை விரிவுபடுத்துகிறார்கள். ஒருசெய்தி வெளியாகும்போது வாசகர்களின் மனநிலையை கூர்ந்து அவதானித்து அவர்களின் விருப்பத்துக்கு ஏற்ப அச்செய்திகளை மேலே கொண்டுசெல்கிறார்கள். உதாரணமாக சமீபத்திய மும்பைக் குண்டுவெடிப்பு முடிந்து இரண்டுநாட்கள் கழிந்ததும் பெரும்பாலான ஊடகங்கள் பாகிஸ்தானுக்கு எதிரான தீவிரமான குரல்களை கொட்ட ஆரம்பித்தன. சென்ற காலங்களில் தீவிரவாதிகளுக்குச் சப்பைக்கட்டு கட்டிய ஊடகங்களும் இதில் அடக்கம்.

*

இந்த நான்குவகை திரிபுகளுக்கும் உள்ளாகி வெளிவரும் செய்திகளை முழுக்க நம்பி அவற்றைக்கொண்டு அரசியல் ஆய்வுகளைச் செய்வதில் எனக்கு எப்போதுமே நம்பிக்கை இருந்ததில்லை. ஆனால் சாதாரணமாக நாம் செய்வது அதைத்தான். இந்தியாவில் விவாதங்கள் அதிகமாக நிகழ்வது இதன்பொருட்டே. இத்தகைய விவாதங்களினால் ஒரு ஜனநாயகத்துக்கு பயன் இருக்கும் என்றே எண்ணுகிறேன். ஏனெனில் சமகால அக்கறை என்பது ஜனநாயகத்தின் அடிப்படை விசை. அரசியல் நோக்கர்கள் அதைப்பற்றி பேசுவது இயல்பே.

ஆனால் என்னைப்போன்ற படைப்பிலக்கியவாதிக்கு அது மிகபெரிய நேர விரயம். நம் மக்கள் சினிமா,அரசியல் இரண்டைப்பற்றியும்தான் பேச விரும்புகிறார்கள். அந்த தளம் சார்ந்து எது சொன்னாலும் அதைப்பற்றி மாற்றுக்கருத்துக்கள் உணர்ச்சிபூர்வமாகவும் நுண்ணலசல்களாகவும் வந்து குவியும். மேலும் தமிழ்நாட்டில் எதுவும் உச்சகட்ட

உணர்ச்சிக்கொந்தளிப்புடன் மட்டுமே முன்வைக்கப்படுகின்றன. எந்தநிலை எடுத்தாலும் வசை உறுதி. இந்நிலையில் இதில் ஈடுபடும் எழுத்தாளன் தன் இலக்கியத்தை மொத்தமாக இழக்க வேண்டியதுதான்.

மேலும் செய்திகள் சூடாக இருக்கும்போது அதைச்சார்ந்த அனைத்து எழுத்துக்களையும் படித்து , அத்தனை தொலைக்காட்சி நிகழ்ச்சிகளையும் உட்கார்ந்து பார்ப்பதென்பது ஒரு படைப்பிலக்கியவாதி தற்கொலை செய்துகொள்வதற்குச் சமம். அவற்றை அல்லும்பகலும் நுணுகி ஆராய்ந்து விவாதிக்கும் ஒருவருடன் படைப்பிலக்கியவாதி எளிதில் விவாதிக்கவும் முடியாது. அவன் செய்திநிபுணன் அல்ல. அவனுக்குச் சொல்ல இருக்கும் சில தளங்கள் உண்டு, அந்த எல்லையை அவன் தாண்டக்கூடாது.

ஒருசெய்தி 'ஆறிப்போன'பின்பு செய்தியாளர்களிடமும் அரசியல்வாதிகளிடமும் அதிகாரிகளுடனும் சாதாரணமாகப் பேசும் வாய்ப்பு கிடைத்தால் அச்செய்தியின் உண்மையான அகம் தெளிவாகும். எந்தெந்த சக்திகளால் அந்தச்செய்திகள் உருமாற்றப்பட்டிருந்தன என்று தெரியவரும். அது மேல்தளச் சித்திரத்துக்கு முற்றிலும் வேறானதாக இருக்கும். உடனடி ஊடகச்செய்திகளைச் சார்ந்து எழுதிக்குவித்தவர்களை எண்ணும்போது பரிதாபமாகவும் இருக்கும்.

ஒருசெய்தியின் வீரியம் குறைந்தபின் சம்பந்தப்பட்ட இடங்களுக்கு நேரடியாக ஒரு எளிய பயணம் மேற்கொண்டால்கூட உண்மைச்சித்திரம் நமக்குக் கிடைக்கும். நான் பெரும்பாலும் அப்படி நேரில்செல்ல முயல்வதுண்டு

ஆகவே நான் செய்திகள் மீது உடனடியாகக் கருத்துச் சொல்வதில்லை என்ற நிலைபாட்டை கடந்த 20 வருடங்களாகவே மேற்கொண்டிருக்கிறேன். சில அபூர்வ தருணங்களில் மட்டுமே எனக்குச் சொல்வதற்கு ஏதேனும் இருக்கிறது, சொல்கிறேன். மற்ற தருணங்களில் என் காலகட்டத்தைப் புரிந்துகொள்ள நான் அறிவனவற்றைப் பயன்படுத்துகிறேன், அவ்வளவுதான்.

## (2) காற்றுமானியின் நடுநிலை

மிலன் குந்தேராவின் The Book of Laughter and Forgetting நாவலில் ஒரு நிகழ்ச்சி. 1948ல் சோவியத் படைகள் செக்கோஸ்லாவாகியாவுக்குள் ஆக்ரமித்துக்கடந்து அந்நாட்டைக்கைப்பற்றி ஆட்சியமைக்கின்றன. செக் நாடு ருஷ்ய ஆதிக்க கம்யூனிச நாடாக அறிவிக்கப்படுகிறது. ருஷ்ய கம்யூனிஸ்டுத் தலைவரான க்ளெமெண்ட் கோட்வால்ட். பிராக் நகரின் பரோக் பாலஸ் என்ற மாளிகையின் பால்கனிக்கு வந்து தன்முன் கூடியிருந்த பல்லாயிரம் மக்களைநோக்கி ஆவேசமான உரையொன்றை நிகழ்த்தினார். அவருக்கு அருகே அவரது தோழரான விளாடிமிர் க்ளெமென்டிஸ் நின்றிருந்தார். பனிபெய்துகொண்டிருந்தது. கோட்வால்டின் தலை திறந்திருப்பதைக்கண்ட க்ளெமெண்டிஸ் தன் பனிக்குல்லாயைக் கழற்றி கோட்வால்டின் தலையில் அணிவித்தார்.

அந்த உப்பரிகையில் இருந்துதான் பொஹீமிய மாநிலக் கம்யூனிஸ்டுக்கட்சி பிறந்தது என்று சொல்லப்பட்டது. ஆகவே கம்யூனிஸ்டுப் பிரச்சார இயந்திரம் அந்தப்படத்தை பல்லாயிரம் பிரதிகள் எடுத்து நாடெங்கும் கொண்டுசென்றது. பள்ளிப்பாடங்கள் அருங்காட்சியகங்கள் எங்கும் அந்தப்படம் காணப்பட்டது.

நான்குவருடங்களுக்குப்பின் அன்று கம்யூனிஸ்டுக் கட்சியின் வலுவான வெளியுறவு அமைச்சராக இருந்த விளாடிமிர் கிளெமெண்டிஸ் கம்யூனிஸத் துரோகி என குற்றம் சுமத்தப்பட்டு தூக்கிலிடப்பட்டார். அவரைப்பற்றிய அனைத்து தகவல்களும் வரலாற்றில் இருந்து அழிக்கப்பட்டன. கலைக்களஞ்சியங்கள் திருத்தப்பட்டன. புகைப்படங்கள் அனைத்திலும் அவர் இல்லாமலாக்கப்பட்டார். வரலாற்றுப்புகழ்பெற்ற அந்தப்புகைப்படத்தில் க்ளெமென்டிஸ் இருந்த இடங்கள் எல்லாம் அழிக்கப்பட்டு அங்கே சுவர் இருந்தது, ஆனால் கோட்வால்டின் தலைமேல் க்ளெமென்டிஸ் வைத்த அந்தக்குல்லாய் அங்கேதான் இருந்தது.

அதே கதையை சிலநாட்கள் முன் பிபிசி செய்தியில் வாசித்தேன். 2011ல் வடகொரிய கம்யூனிச அரசின் அதிபர் கிம் ஜோங் இல் இறந்தபோது அவரது சகோதரியின் கணவனான சாங்க் சோங் தாயேங் என்பவர் கிம் ஜோங்கின் மகனும் புதிய தலைவருமான கிம் ஜோங் உன் பதவிக்கு வந்து அதிகாரத்தை

உறுதிப்படுத்துவதற்கு உறுதுணையாக இருந்தார். வடகொரிய அரசின் உண்மையான அதிகாரமையமாக சாங்க் சோங் தாயேக் இருந்தார் என்று சொல்லப்படுகிறது. ஆனால் சாங்க் சோங் தாயேங் எல்லா பொறுப்புகளில் இருந்தும் விடுவிக்கப்பட்டார் என்ற தகவல் டிசம்பர் மாத இறுதியில் சர்வதேச ஊடகங்களுக்குத் தெரியவந்தது. அவரும் அவரது ஆதரவாளர்களும் சென்ற நவம்பரிலேயே பொது இடத்தில் தூக்கிலேற்றப்பட்டு கொல்லப்பட்டார்ககள் என்ற செய்தி பிறகு வந்தது.

இச்செய்தியை வடகொரியா எவ்வகையிலும் உறுதிப்படுத்தவில்லை. சென்ற டிசம்பர் 9 ஆம் தேதி சாங்க் சோங் தாயேங் கொல்லப்பட்டதை வடகொரியா தனக்கே உரியமுறையில் உறுதிப்படுத்தியது. அதிபரின் நிகழ்ச்சிகள் பற்றிய அனைத்து புகைப்படங்களிலும் அனைத்து ஆவணப்படங்களிலும் சாங்க் சோங் தாயேக் முழுமையாக அகற்றப்பட்டார். பிபிசி வெளியிட்ட செய்தியில் அனைத்துப் புகைப்படங்களிலும் அவர் 'கண்ணுக்குத்தெரியாமலானதை' காணமுடிகிறது. இயல்பாக மறைந்திருந்தால் அவர் கொஞ்சகாலத்தில் நினைவுகளில் இருந்து அழிந்திருப்பார். இனிமேல் அவர் என்றென்றும் கொரிய வரலாற்றில் இருந்துகொண்டிருப்பார்

நான் எழுதிய பின்தொடரும் நிழலின் குரல் சோவியத் ருஷ்யாவின் வீழ்ச்சியின்பின்னணியில் எழுதப்பட்ட அரசியல் நாவல். முக்கால்நூற்றாண்டுக்கால ருஷ்யக் கம்யூனிசப் பரிசோதனையின் பெறுமதியை ஆராய்வது. கருத்தியல் மனித அறத்துடன் எவ்வாறெல்லாம் முரண்படுகிறது என்பதை விவாதிப்பது. அந்நாவலுக்குள் ஒரு சிறுகதை வரும். 'இறுதி யந்திரம்' என்ற அச்சிறுகதை ஒரு மிகுபுனைவு. ஸ்டாலினைப் பார்க்க அழைத்துச்செல்லப்படும் ஒரு அறிவியல் கண்டுபிடிப்பாளரின் கதை அது.

அவர் ஒரு ஜிப்ஸி. வரலாற்றின் பக்கங்களில் மறைந்து திரிந்த அனுபவங்களைக்கொண்டு அவர் ஓர் இயந்திரத்தைக் கண்டுபிடிக்கிறார். அந்த இயந்திரம் மனிதர்களை இல்லாமலாக்கிவிடும். நேரிலும், வரலாற்றிலும் ,நினைவுகளிலும் எல்லாம். அவர் இறக்கமாட்டார், பிறக்காமலேயே ஆகிவிடுவார். இயந்திரத்தை ஸ்டாலின் வாங்கிக்கொள்கிறார். பல அதிகாரிகளை உடனுக்குடன் இல்லாமலாக்கி

அதை சோதனைசெய்து நிறைவடைகிறார். பணம் பெற்றுக்கொண்டு அங்கிருந்து கிளம்பும் அந்த அறிவியல்கண்டுபிடிப்பாளர் ஒரு ரகசியத்தை அறிவார் என கதைமுடியும். இல்லாமலான அனைவரும் அந்த இயந்திரத்துக்குள் இருப்பார்கள். அந்த இயந்திரம் ஸ்டாலினின் தலைமாட்டில் இருந்துகொண்டிருக்கும்

வரலாற்றில் புதியதாக ஏதும் நிகழ்வதில்லை போலும். பதினைந்தாம் நூற்றாண்டில் இந்தியாவை ஆண்ட முகலாயச் சக்கரவர்த்தி அக்பரின் மாமன் பைராம் கானின் கதையும் இதுவே. பைராம்கான் ஹுமாயூனுக்கு மிக நெருக்கமான ராணுவத்தளபதி. ஹுமாயூன் பாரசீகத்தில் நாடிழந்து அலைந்தபோது துணைநின்றவர். மீண்டும் டெல்லியை ஹுமாயூன் கைப்பற்ற காரணமாக அமைந்தவர்.

ஹுமாயூன் இறந்தபோது 13 வயதாக இருந்த அக்பர் ஆட்சிக்கு வருவதற்கு பைராம்கான் தான் காரணம். பல்வேறு அதிகாரப்போட்டிகளையும் சதிகளையும் சமாளித்து அக்பரை அரியணையில் அமர்த்தி அவர் பாதுகாவலராக இருந்து ஆட்சிசெய்தவர் அவர். வலுவான இந்து அரசர்கள் ஹெமுவின் தலைமையில் அக்பரை எதிர்த்தபோது அவர்களைத் தோற்கடித்து அக்பரின் அரசை காப்பாற்றியவர் பைராம்கான்தான்.

பைராம்கான் ஷியா முஸ்லீம். சுன்னி முஸ்லீமான ஹுமாயூன் பாரசீகத்தில் நாடிழந்து அலைந்தபோது ஹுமாயூன் ஷியாவாக மாறினால் படைபலம் கொடுத்து ஆதரிப்பதாக பாரசீக மன்னர் சொன்னார். அதை ஏற்று ஹுமாயூன் ஷியாவாக மாறினார். பாரசீகப்படைகளின் உதவியுடன் ஹுமாயூன் டெல்லியைக் கைப்பற்றினார். டெல்லியைப்பிடித்ததும் அவர் மீண்டும் சுன்னியாக மாறினார். ஆப்கானில் பிறந்த ஷியா முஸ்லீமான பைராம்கான்தான் ஹுமாயூனுக்கும் பாரசீகமன்னருக்கும் இடையே பேச்சுவார்த்தைகளை நடத்தியவர்.

பைராம்கானுக்கு எதிராக டெல்லியின் சுன்னி முஸ்லீம் படைத்தலைவர்களும் பிரபுக்களும் காழ்ப்புகொண்டிருந்தனர். அக்பர் பதவிக்கு வந்ததும் அவர்களின் குரல் ஓங்கியது. அக்பரை கொன்று ஆட்சியைக்கைப்பற்ற பைராம்கான் சதிசெய்வதாக அக்பர் நம்பவைக்கப்பட்டார். அதன்விளைவாக 1560ல் அக்பர் பைராம்கானை பதவிநீக்கம்செய்து கைதுசெய்தார். மெக்காவுக்குச் செல்லும்படி

ஆணையிடப்பட்ட பைராம்கான் அவ்வாறு செல்லும் வழியில் குஜராத்தில் வைத்து கொல்லப்பட்டார்.

வேறுவகை வரலாறு எங்காவது உள்ளதா என்று மூளை நமநமத்தது. சட்டென்று நினைவுக்கு வந்தது, அருண்நேரு. இந்திரா காந்தியின் மருமகன் அவர். ராஜீவ் காந்தியை அரசியலுக்குக் கொண்டுவந்தபோது அவருக்குத்துணையாக இருக்கும்படி அருண் நேருவை கோரினார் இந்திரா காந்தி. ஜென்ஸன் ஆண்ட் நிக்கல்சன் சாயநிறுவனத்தில் பணியாற்றிக்கொண்டிருந்த அருண்நேருவை அரசியலுக்குக் கொண்டுவந்தார்.

இந்திரா காந்தி 1984ல் கொல்லப்பட்டபோது இளைஞராகவும் அனுபவமற்றவராகவும் இருந்த ராஜீவ் காந்தி இந்தியப்பிரதமராகவும் காங்கிரஸ் தலைவராகவும் பொறுப்பேற்கவும் செயல்படவும் உறுதுணையாக அமைந்தவர் ஒருவர் அருண்நேரு. நேரு குடும்பத்தின் ஆஸ்தான தொகுதியான ரே-பரேலியில் இருந்து பாராளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். மத்திய அமைச்சராக பணியாற்றினார்.

ராஜீவ் ஆட்சிக்காலத்தில் அனைத்துவல்லமைகளும் கொண்டிருந்த அருண் நேரு அக்காலத்தில் ராஜீவ் அரசுமீது சுமத்தப்பட்ட பல ஊழல்வழக்குகளிலும் குற்றவாளி எனறு சுட்டிக்காட்டப்பட்டார். முக்கியமாக செக்கோஸ்லாவாகிய கைத்துப்பாக்கி ஊழலில் அவரே முதற்குற்றவாளி என்று சொல்லப்பட்டது. பின்னர் அவர் ராஜீவ்காந்தியிடம் கருத்துவேறுபாடு கொண்டார். ராஜீவின் ஆலோசகர்களும் அடிப்பொடிகளும் மாறினார்கள். அருண்நேரு வெளியேற்றப்பட்டார்.

ஆனால் அருண் நேரு அழித்தொழிக்கப்படவில்லை, மாறாக எதிர்கட்சியில் சென்று சேர்ந்தார். ஜனதாதளத்தின் சார்பில் தேர்தலில் போட்டியிட்டு வென்று அமைச்சராகவும் பணியாற்றினார். அரசியல் கட்டுரையாளராக தொடர்ந்து செயல்பட்ட அருண் நேரு 2013 ஜூலையில் மரணமடைந்தார்.

அரசதிகாரம் என்பது எப்போதும் கடைசியில் ஒரு சிறு குழுவினராலேயே நேரடியாகக் கையாளப்படுகிறது. மன்னராட்சியாக இருந்தாலும் சர்வாதிகார ஆட்சியாக இருந்தாலும் ஜனநாயகமாக இருந்தாலும். உடனடி முடிவுகளை எடுப்பதும் செயல்படுத்துவதும் அவர்களே. அந்தச் சிறுகுழுவுக்குள் கடுமையான அதிகாரப்போட்டி ஒன்று

நடந்துகொண்டிருப்பதைத் தவிர்க்கமுடியாது. அது அந்த மனிதர்களின் உலகப்பார்வை சார்ந்த மோதலாக இருக்கலாம். அகங்காரப்போட்டியாக இருக்கலாம். அவற்றைவிட முக்கியமாக அம்மனிதர்கள் பிரதிநிதித்துவம்செய்யும் அதிகாரவிசைகளின் மோதலாக இருக்கலாம். உள்மோதலே அந்தக்குழு செயல்படும் வழிமுறை.

அந்த உள்மோதலை ஒற்றுமையின்மை என்று எளிமையாகப் புரிந்துகொள்ளமுடியாது. உண்மையில் அதுவும் ஒருவகை ஜனநாயகமே. உதாரணமாக ராஜீவின் அதிகார உள்வட்டத்துக்குள் அருண்நேரு தாராளவாத பொருளாதாரச் சீர்திருத்தங்களுக்கு முழு ஆதரவளிப்பவராக இருந்தபோது வி.பி.சிங் அரசதிகாரத்தின் கட்டுப்பாட்டை விரும்பக்கூடியவராக இருந்தார். இவ்வாறு பலவகையான கருத்துநிலைகளைக் கொண்டவர்கள், தேசத்தின் பலவகையான அதிகாரசக்திகளின் பின்புலம் கொண்டவர்கள் ஒருவரோடொருவர் முரண்பட்டு ஒரு பொதுமுடிவை அடையும்போதுதான் அது உண்மையான அதிகாரச் சமநிலையை உருவாக்குகிறது. ஜனநாயகம் என்பதே பல்வேறு அதிகாரங்கள் நடுவே சரியான சமநிலைப்புள்ளியைக் கண்டுகொள்வதில்தான் உள்ளது.

எந்த ஒரு அதிகார அமைப்பிலும் அந்த உள்வட்ட மோதல் இருந்துகொண்டேதான் இருக்கும். உதாரணமாக ராஜராஜ சோழனின் அதிகார உள்வட்டத்தில் மறவர், வேளாளர் முரண்பாடு மிக வலுவாக இருந்திருக்கிறது. முகலாய உள்வட்டத்தில் ஷியா- சுன்னி போராட்டமும், ஆப்கானிய- பாரசீக வம்சாவளியினரின் உள்முரணும் வலுவாக இருந்துள்ளது. மன்னராட்சி என்பது ஆசாரங்களுக்குக் கட்டுப்பட்டது. ஆசாரநம்பிக்கைகளே மன்னர்களை அந்த பீடத்தில் அமரச்செய்கின்றன. ஒவ்வொருவரையும் அவரவருக்கான இடங்களில் நிலைநிறுத்துகின்றன. ஆகவே ஆசாரங்கள் அனுமதித்த ஒரு சுதந்திரம் உள்வட்ட அதிகாரசக்திகளுக்கு உண்டு. அதை மன்னர்கள் பறிக்கமுடியாது. ஆசாரமீறல் நிகழ்ந்தால் மக்களின் எதிர்ப்பு உருவாகநேரிடும். ராஜராஜசோழனின் அதிகாரம் என்பது அவருக்கு கட்டுப்பட்ட குறுநிலமன்னர்களின் கூட்டு அங்கீகாரம் வழியாக அவருக்குக் கிடைப்பது. அந்த மன்னர்கள் அவர்களின் குல ஆசாரங்களுக்குக் கட்டுப்பட்டவர்கள்.

சர்வாதிகார ஆட்சிகளுக்கு மக்கள் ஒரு பொருட்டே அல்ல. வலிமையான ஆயுதங்கள் மூலம், சுயமான வளங்கள் மூலம் உலகநாடுகளின் எதிர்ப்பை அலட்சியப்படுத்த முடிந்தால் எதைப்பற்றியும் கவலைப்படவேண்டியதில்லை. ஆகவே அங்குள்ள உள்வட்ட அதிகார மோதல் எப்போதுமே அழித்தொழிப்பில்தான் முடிகிறது. ரஷ்யா, சீனா, கம்போடியா, கொரியா போன்ற கம்யூனிச அரசுகள் ஹிட்லர் ,முசோலினி போன்றவர்களின் நாசிச, ஃபாசிச அரசுகள் செயல்பட்ட விதம் அதுதான். வடகொரியாவில் நடந்துகொண்டிருப்பதும் அதுவே. வென்ற தரப்பு தோற்ற தரப்பை முழுமையாகவே இல்லாமலாக்குகிறது. அவர்களை துரோகிகள் என்று அடையாளப்படுத்துகிறது. சர்வாதிகாரத்தின் இயங்குமுறையை இப்படி வரையறுக்கலாம்—அது துரோகிகளையும் தியாகிகளையும் உருவாக்கிக்கொண்டே இருக்கும். தியாகிகள் துரோகிகளாக ஆவது அதன் ஒரு பகுதிதான். நாளையே இன்றைய வடகொரிய அதிகர் அடுத்துவருபவரால் துரோகியாக அறிவிக்கப்ப்ட்டால், தூக்கிலிடப்பட்டால் ஆச்சரியம் கொள்ள ஏதுமில்லை.

இந்தியாவில் ஜனநாயகம் இருந்ததனால் அருண்நேரு கடைசிவரை ராஜீவ்காந்தியின் வலுவான எதிர்தரப்பாக நீடித்து அரசியலில் செயல்பட்டார். தாராளவாதப் பொருளியல் சிர்திருத்தங்களுக்காக தொடர்ச்சியாக பேசிக்கொண்டிருந்தா. பைராம் கானை அகற்ற அக்பருக்கு ஒரு நுட்டமான நாடகம் தேவைப்பட்டது. ராஜராஜசோழனும் அவ்வாறு பல நுட்பமான நாடகங்கள் வழியாகவே செயல்பட்டிருப்பார். ஆனால் தென்கொரியாவில் சாங் சோன் தாயேக்க்கை மௌனமாக கிள்ளி அப்பால் போட்டிருக்கிறார்கள். இதுதான் அரசுகள் நடுவே உள்ள வேறுபாடு.

ஜனநாயகம் என்பது முரண்பாடுகள் வழியாக மட்டுமே செயல்படக்கூடிய ஓர் அரசமைப்பு என்பதை சிந்திப்பவர்களில்கூட பலர் புரிந்துகொள்வதில்லை. ஜனநாயகம் என்பது மக்களிடம் உருவாகி வந்திருக்கும் அதிகாரச் சமநிலையை அரசாங்கத்திலும் உருவாக்கிக் கொள்வதற்கான ஓர் அமைப்பு. மக்களிடம் இருக்கும் அத்தனை அதிகாரமோதல்களும், அத்தனை முரண்பாடுகளும் அரசாங்கத்தில் பிரதிபலித்தாகவேண்டும். சமூகத்தில் உருவாகிவரும் அதிகாரச் சமநிலை அரசில் பிரதிபலிக்கவேண்டும். காற்றுத்திசையைக் காட்டும் சேவல்பொம்மைபோன்றது ஜனநாயக அரசு. காற்றுக்கேற்ப அது

மாறிக்கொண்டேதான் இருக்கும். காற்று நிலையற்றது என்பதனால் அதுவும் நிலையற்றதாகவே இருக்கமுடியும். எந்த அளவுக்கு கச்சிதமாக நிலையற்றிருக்கிறதோ அந்த அளவுக்கு அது நல்ல காற்றுமானி, நல்ல ஜனநாயக அரசு.

ஆகவே ஜனநாய்கம் இருக்குமிடத்தில் முரண்பாடும் மோதலும் எப்போதும் வெளியே தெரியும். டிசம்பரில் திடீரென்று சாங்க் சோங் தாயேக் அகற்றப்படும்வரை அது எவருக்கும் தெரிந்திருக்காது. ஜனநாயக அரசு இருந்திருந்தால் 2011 முதலே அவருக்கும் மருமகனுக்குமான மோதல்கள் செய்தியில் அடிபட்டுக்கொண்டே இருந்திருக்கும். ஜனநாயகத்தைப்புரிந்துகொள்ளாத ஒருவர் அந்தச் சர்வாதிகாரத்தை அமைதி என்றும் உறுதி என்றும் விளங்கிக்கொள்வார். ஜனநாயகத்தை கூச்சல் என்றும் என்றும் நினைப்பார். அத்தனை தடுமாற்றங்களுடனும் நிலையின்மையுடனும் ஜனநாயகம் சரியான பாதையில் செல்கிறது, அத்தனை உறுதியுடன் சர்வாதிகாரம் மக்களுக்கெதிரான பாதையில் செல்கிறது என்பதே அதற்கான பதிலாகும்.

## (3) சாரையின் நடுக்கண்டம்

அரவிந்த் கேஜரிவாலின் ஆம் ஆத்மி கட்சி டெல்லி தேர்தல்களில் பெற்ற வெற்றியைத் தொடர்ந்து இந்தியாவெங்கும் ஒருவகையான நம்பிக்கை அலை உருவாகியிருக்கிறது. கேரளத்தில் ஆம் ஆத்மி கட்சிக்கு புதியதாக ஒரு கிளை உருவாக்கப்பட்டது. அந்த தொண்டர்கள் அனைவரும் உற்சாகமான படித்த இளைஞர்கள். ஆம் ஆத்மி கட்சியின் பிரத்யேகபாணி குல்லாய்களை அணிந்துகொண்டு மக்களிடம் அவர்கள் ஆதரவு திரட்டுவதை தொலைக்காட்சியில் கண்டேன்.

ஆம் ஆத்மி கட்சி டெல்லியில் பெற்ற வெற்றி அனைவருக்குமே ஆச்சரியம்தான். அது பெரும்பாலும் படித்த நடுத்தரவர்க்க இளைஞர்களால் உருவாக்கப்பட்ட கட்சி. அதற்கு மதம்,சாதி, இனம்,வட்டாரம் சார்ந்த அரசியல் ஏதும் இல்லை. அத்தகைய குறுகியஅரசியல்கள் இல்லாத எந்தக் கட்சியும் இந்தியாவில் சமீபகாலங்களில் இந்தியாவில் மக்களாதரவைப் பெற்றதில்லை. அதோடு ஆம் ஆத்மி கட்சிக்கு திட்டவட்டமான அரசியல் கொள்கைகளோ கோட்பாடுகளோ இல்லை. அரசியல் சார்ந்த, சமூகம் சார்ந்த நீண்டகாலச் செயல்திட்டங்களும் அவர்களுக்கில்லை. அவர்கள் உடனடியாக நிர்வாகமுறையில் சில மாறுதல்கள் தேவை என்று கோரும் இளைஞர்கள் மட்டுமே. அதாவது அவர்கள் உயர்நிர்வாக அமைப்பில் ஊழல் இருக்கக்கூடாதென நினைக்கும் ஒரு குழு, அவ்வளவுதான்.

ஏன் அது இத்தனை பரபரப்பை உருவாக்குகிறது? சென்ற கால்நூற்றாண்டாகவே இந்திய அரசியலில் படித்த,நவீன இளைஞர்களுக்கு இடமே இல்லை என்ற நிலை உள்ளது. அரசியலுக்குள் நுழைவதற்கான வழிகளாக இங்குள்ளவை இரண்டுதான். ஒன்று வாரிசுகளாக. இன்னொன்று ஏற்கனவே அரசியலில் இருக்கும் ஒருபிரமுகரின் அடிப்பொடிகளாக. இரண்டாவதுதான் சாமானியனுக்குத் திறந்திருக்கும் ஒரே வழி. அது குறைந்தபட்சத் சுயமரியாதை கொண்ட ஓர் இளைஞருக்கு ஏற்புடையதாக இருப்பதில்லை. ஆகவே பெரும்பாலும் இங்கே அரசியலில் நுழைபவர்கள் கிராமப்பின்புலம் கொண்ட, அதிகம் படிக்காத இளைஞர்கள். சிறியதொழில்கள் செய்பவர்கள் அல்லது வழக்கறிஞர்கள். அவர்களின்

தொழிலுக்கே கொஞ்சம் அரசியல் இருந்தால் நல்லது. அதற்காக எந்தச் சமரசத்தையும் செய்யக்கூடியவர்களாக அவர்கள் இருப்பார்கள்.

அதாவது இங்கே அரசியல் செயல்படுவது நிழல் உலக குற்றக்குழுக்களின் பாணியில்தான். பெரும்பாலும் நேரடியாகவே குற்றப்பின்னணி கொண்டவர்கள் அதில் ஈடுபடுகிறார்கள். அவர்கள்தான் அங்கே மிகவெற்றிகரமாகச் செயல்பட முடிகிறது, மேலே செல்லமுடிகிறது. ஆகவே இந்தியாவில் இன்றைய கட்சி அரசியல் என்பது குற்றப்பின்னணிகொண்டவர்களுக்கு மட்டுமே உரியதாக மெல்லமெல்ல ஆகிவிட்டிருக்கிறது. கொஞ்சமேனும் விதிவிலக்காக இருப்பவை வலதுசாரி இடதுசாரி அமைப்புகளான பாரதிய ஜனதாவும் கம்யூனிஸ்டுகளும். ஆனால் அவற்றில்கூட எங்கெல்லாம் அரசதிகாரம் கையில் இருக்கிறதோ அங்கெல்லாம் குற்றப்பின்னணிகொண்டவர்கள் அதிகமாக ஊடுருவிவிட்டிருக்கிறார்கள்.

இந்நிலையில் அரசியலை மாற்ற படித்தவர்கள் அரசியலுக்கு வரவேண்டுமென்ற கோஷம் அடிக்கடி எழுகிறது. ‘அரசியல் என்ற சாக்கடையைச் சுத்தம் செய்ய’ இளைஞர்கள் இறங்கவேண்டும் என அவ்வப்போது ‘சான்றோர்கள்’ மேடையில் சொல்லிவிட்டு இறங்கிச்செல்வார்கள். அதை நம்பி அவ்வப்போது சில முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டதுண்டு. அவையெல்லாமே மக்களால் கேலிக்குரியவகையில் நிராகரிக்கப்பட்டுள்ளன. ஒரு நேர்மையான படித்த நல்ல நோக்கமுள்ள இளைஞர் தனியாகவோ அல்லது ஒரு தங்களுக்கான கட்சி சார்பிலோ தேர்தலில் போட்டியிடுகிறார் என்று கொள்வோம். அவருக்கு எதிராக ஒரு குற்றப்பின்னணிகொண்ட, ஊழலை மட்டுமே நோக்கமாகக் கொண்ட, படிக்காத ஒருவர் சாதி,மத, இன,மொழி, வட்டாரவாத அரசியல் கட்சி ஒன்றின் பிரதிநிதியாகப் போட்டியிடுகிறார் என்று வைத்துக்கொள்வோம். இந்திய வாக்காளர் இரண்டாவது நபருக்குத்தான் வாக்களிப்பார். இன்றுவரை அதுதான் இங்கே நிகழ்ந்து வருகிறது.

உடனடி உதாரணம், கான்பூரிலும் மும்பையிலும் ஐஐடி மாணவர்களால உருவாக்கப்பட்ட அரசியலமைப்பான லோக் பரித்ரன். அது தேர்தலில் நின்று படுதோல்வியடைந்தது. அத்தகைய ஏராளமான உதாரணங்களைச் சுட்டிக்காட்டலாம். இந்தச்சோர்வுச்சூழலில் ஆம் ஆத்மி கட்சியின் வெற்றி ஒரு நம்பிக்கையை படித்த இளைஞர்களுக்குக் கொடுக்கிறது. தங்களுக்கென

ஓர் அரசியல் சாத்தியமென்ற எண்ணம் உருவாகிறது. இன்று உருவாகியிருக்கும் உற்சாகத்திற்கான காரணம் இதுவே. ஆனால் இந்த உற்சாகத்திற்கான நடைமுறைவாத அடிப்படை என ஏதேனும் உண்டா? இன்று ஆம் ஆத்மி கட்சிமேல் வைக்கப்படும் நம்பிக்கை காப்பாற்றப்படுமா? அது ஏதேனும் வெற்றிகளை அடையுமா?

அதற்கு முன் நாம் கேட்டுக்கொள்ளவேண்டியது ஒன்றுண்டு. இந்திய வாக்காளர் தன்னுடைய வாக்கை ஏன் ஒரு குற்றப்பின்னணிகொண்டவருக்கு, ஊழல்வாதிக்கு போடத் தயாராக இருக்கிறார்? ஏனென்றால் அந்த நபருக்கு அவர் வாக்களிக்கவில்லை. அந்நபர் பிரதிநிதித்துவம் செய்யும் அரசியல் கட்சி மீது அவருக்கு நம்பிக்கை இருக்கிறது. அந்த கட்சி தன்னுடைய, தன் சாதியின், தன் குழுவின் நலத்தைப்பாதுகாக்கக்கூடியது; அதற்காகப் போராடக்கூடியது என அவர் நினைக்கிறார். சராசரி இந்திய வாக்காளர் இன்று எந்த இலட்சியத்துக்காகவும், எந்தக் கொள்கைக்காகவும் வாக்களிக்கவில்லை. முழுக்கமுழுக்க தன் சுயநலத்துக்காகவே வாக்களிக்கிறார். பல்வேறு அடையாளங்கள் சார்ந்து மக்களின் சுயநலங்களைத் திரட்டிக்கொள்ளும் அமைப்புகளே இன்று வெற்றிகரமான கட்சிகளாக ஆகின்றன.

இந்தியாவின் சுதந்திரப்போராட்ட காலத்தில் இந்திய சமூகத்தில் இருந்த இலட்சியவாதம் சுதந்திரம் நெருங்கியபோதே அழிய ஆரம்பித்தது. மாகாணத்தேர்தல்களில் போட்டியிட்டு அரசமைக்க காங்கிரஸுக்கும் பிற கட்சிகளுக்கும் வாய்ப்புகிடைத்தபோதே சுயநல அரசியல் ஆரம்பித்துவிட்டது. ஆங்கில அரசு சாதி மதம் சார்ந்து இடஒதுக்கீட்டுச் சலுகைகள் அளிக்க ஆரம்பித்ததுமே இந்திய சமூகத்தில் குழுசார்ந்த அரசியல் பிறந்துவிட்டது. சுதந்திரத்துக்குப்பின் இந்திய மக்கள் மொத்தமாகவே பல்வேறு அதிகாரஅலகுகளாக தங்களப் பிரித்துக்கொண்டனர். முதல்பிரிவினை மொழிவழி மாநிலங்களுக்கான கோரிக்கையை ஒட்டி இந்தியாவெங்கும் உருவான வட்டாரவாதம் மற்றும் மொழிவாதம். அதன்பின்னர் இட ஒதுக்கீட்டுக்காக உருவான சாதியவாதம். இவ்வாறு பல்வேறு பிரிவினைகள்.

இன்றைய இந்திய அரசியலென்பது இத்தகைய ஒவ்வொரு குழுவும் தன்னை வாக்குவங்கிகளாக ஆக்கிக்கொண்டு தேர்தலரசியலில் செல்வாக்கு செலுத்தி, அரசதிகாரத்தில் பங்கு பெற்று, தங்களுக்கு முடிந்தவரை அதிக

லாபங்களைப் பெற்றுக்கொள்வதுதான். இந்த லாபங்களின் பங்குக்காகவே சாதாரண மக்கள் முண்டியடிக்கிறார்கள். எவரும் எந்த இலட்சியத்தையும் பெரியதாக நினைப்பதில்லை. ஆகவே ஊழல் எவருக்கும் ஒரு பிரச்சினையே அல்ல. ஊழல் மூலம் தன் குழு லாபம் தேடியிருந்தால், அந்த லாபம் ஓரளவேனும் தனக்கும் அளிக்கப்பட்டிருந்தால் சராசரி இந்தியக்குடிமகனுக்கு அதில் எந்த எதிர்ப்பும் இல்லை.

பொது உரையாடல்களில் அடிக்கடி மக்கள் ஊழலுக்கு எதிராக மனம் கசந்து பேசுவதைக் கேட்கலாம். சினிமாக்களில் அரசியல்வாதிகளை வில்லன்களாக காட்டுவதை, கதாநாயகர்கள் அவர்களை அடித்துத் துவைப்பதை மக்கள் ரசிப்பதைக் காணலாம். ஆனால் அவர்களுக்குத்தான் மக்கள் வாக்களிப்பார்கள், காரணம் அவர்கள்தான் அரசியலில் தங்களுக்காக போராடுவார்கள், தங்கள் சுயநல நோக்கங்களுக்கு உதவுவார்கள் என மக்கள் நினைக்கிறார்கள். தேர்தல்காலங்களில் மக்களின் மனநிலை வியப்பூட்டும்படி மாறுவதைக் காணலாம். அதுவரைப் பேசிவந்த நேர்மை, கொள்கை சார்ந்த அனைத்தையும் மக்கள் எளிதில் மறந்துவிடுவார்கள். தங்கள் அதிகாரக்குழுவுக்குள் யார் மிகச்செல்வாக்காக இருக்கிறார்களோ அவர்களுக்கே வாக்களிப்பார்கள். அவர்தான் ஜெயிக்க வாய்ப்புள்ளவர், அவருக்கு வாக்களித்தால் மட்டுமே வாக்கு வீணாகாது என அதற்கு அவர்கள் ஒரு நியாயத்தையும் சொல்வார்கள்.

இந்தியாவின் அரசியல்வாதிகளின் நேர்மையின்மை இந்தியமக்களின் நேர்மையின்மையின் சரியான பிரதிலிப்பு மட்டுமே. அரசியல்வாதிகளின் ஊழல் இந்தியமக்களின் ஊழலேதான். இந்தியாவின் சீரழிந்த தன்மை இந்தியமக்களின் சீரழிவுமட்டுமே. இந்தியா மிகச்சரியாகவே அதன் பிரதிநிதிகளைத் தேர்வுசெய்கிறது. அரசியல்வாதிகளை இந்தியமக்கள் வசைபாடுவது தங்கள் சொந்த அயோக்கியத்தனங்களை மறைத்துக்கொள்ளும்பொருட்டே. தங்களுக்கு திருடுவதற்கு ஒரு வாய்ப்பு கிடைத்தால் அடுத்தக்கணமெ 'இங்க யார் சார் யோக்கியன்?' என நியாயப்படுத்த ஆரம்பித்துவிடுவார்கள்.

ஆகவேதான் இந்தியாவில் அப்பட்டமாக ஊழல்குற்றச்சாட்டுகளில் சிக்கியவர்கள் அனைவருமே மக்களால் மீண்டும் தேர்ந்த்டுக்கப்பட்டிருக்கிறார்கள். மகாராஷ்டிர மாநில முதல்வராக இருந்த

ஏ.ஆர்.அந்துலே நிலமோசடியை ஊக்குவித்து ஊழல்செய்து கையும் களவுமாக மாட்டிக்கொண்டு பதவியிழந்தார். தேசமே அவரைப்பற்றி பேசியது, வெட்கப்பட்டது. சில வருடங்களுக்குள் அம்மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு வலுவான அரசியல்வாதியாக மீண்டு வந்தார். 2002ல் இந்திய தொலைதொடர்புத்துறை அமைச்சராக இருந்த சுக்ராம் கோடிக்கணக்கான ஊழல் பணத்தை கட்டுகட்டாக வீட்டிலேயே வைத்திருந்து மாட்டிக்கொண்டார். ஆனால் அவர் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு அரசியலுக்குத் திரும்பி வந்தார். தமிழகத்திலும் ஊழலுக்காக குற்றம்சாட்டப்பட்ட அரசியல்வாதிகள் அனைவருமே மக்களால் திரும்பவும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்.

இந்தியா என்ற பிரம்மாண்டமான ஜனநாயகம் இன்று செயல்படும் விதம் இதுதான். நூற்றுக்கணக்கான ஆதிக்கவிசைகள் ஒன்றுடன் ஒன்று மோதி சமன்செய்துகொண்டு ஒரு சமரப்புள்ளியைக் கண்டடைவதைத்தான் இங்கே ஜனநாயகம் என்கிறோம். மதம், சாதி,இனம்,மொழி,வட்டாரம் சார்ந்த குழுக்களுக்கு அப்பால் நூற்றுக்கணக்கான தொழில்வட்டங்கள் உள்ளன. மும்பையின் சர்க்கரைஉற்பத்தியாளர் வட்டம் போல. குஜராத்திய பருத்தி உற்பத்தியாளர் வட்டம்போல. இதற்குமேல் இந்தியாவின் பிரம்மாண்டமான நிர்வாகஇயந்திரமான அதிகாரிகளின்கூட்டு ஒரு பெரிய அதிகாரவிசை. தொழிற்சங்கங்கள் மூலம் ஒருங்கிணைக்கப்பட்ட தொழிலாளர்கள் இன்னொரு விசை.இந்த அதிகாரவிசைகள் எவற்றுக்கும் எந்தக் கொள்கையும் கிடையாது, சுயநலம் தவிர.

இந்த விசைகள் நடுவே தொடர்ச்சியாக சமரசத்தை உருவாக்கிக்கொண்டே இருப்பதுதான் இந்தியாவில் உள்ள அத்தனை அரசுகளும் செய்துவரும் பணி என்றால் அது மிகையல்ல.உண்மையில் ஜனநாயகத்தில் ஓர் அரசின் வேலை என்பதே அதிலுள்ள அதிகாரவிசைகள் நடுவே சுமுகமான அதிகாரப்பங்கீடு நிகழும்படிப் பார்த்துக்கொள்வதுதான்.அந்த அதிகாரப்பங்கீட்டில் வன்முறை நுழைக்கப்படும்போதே அரசு வன்முறையை கையிலெடுக்கிறது. இந்தப் பங்கீட்டுவேலையை ஆற்றும் அரசியல்வாதிகள் அதற்கான வெகுமானமாக ஊழல்பணத்தைப் பெற்றுக்கொள்கிறார்கள். குறைவான கல்வியறிவுள்ள இந்தியமக்களிடையே தேர்தலில் தங்களைப் பிரச்சாரம் மூலம் கொண்டுசென்று சேர்க்க இங்கே அரசியல்வாதிகளுக்கு பெரும் பணம்

தேவைப்படுகிறது. ஆகவே மேலும் ஊழல் பெருகுகிறது. விளைவாக ஊழல் இங்கே அரசநிர்வாகத்தின் இன்றியமையாத ஒரு பகுதியாக உள்ளது.

அரசு என்பது ஊழலில்லாமல் நிகழ முடியுமா என்றே ஐயமாக இருக்கிறது. மன்னராட்சியில் ஊழல் செய்வது மன்னர்கள் மற்றும் அவரது குடுமபத்தினரின் உரிமை. அது ஊழலாக மக்களால் கருதப்படுவதில்லை. சவூதி அரேபிய மன்னர்குடும்பமோ புரூனேயின் சுல்தானோ அரசுப்பணத்தை தனக்காகச் செலவிடுவது ஊழல் என்று சொல்லப்படுவதில்லை. அரசும் மன்னரும் வேறுவேறல்ல.சர்வாதிகார அரசுகளில் ஊழல் மக்களின் பார்வைக்கே வருவதில்லை. வந்தாலும் செய்தியாக ஆவதில்லை. ஜனநாயகத்தில்தான் ஊழல் மக்களால் கண்காணிக்கப்படுகிறது. செய்திகளில் இடம்பெறுகிறது, விவாதிக்கப்படுகிறது. சரியான ஜனநாயகம் உள்ள இட்ங்களில் மக்களின் பிரதிநிதிகளின் அமைப்புகளால் ஊழல் கட்டுப்படுத்தப்படுகிறது.

இந்தியாவின் இன்றையசூழலில் ஊழல் மிகப்பெரிய பிரச்சினை என்பதை மறுப்பதற்கில்லை. மேல்மட்டம் முதல் அடிமட்டம் வரை பரவியிருக்கும் ஊழல் தேசத்தை கிட்டத்தட்ட சேற்றில் சிக்கிய யானைபோல அசைவற்றதாக ஆக்கிவிட்டிருக்கிறது. அடிமட்ட ஊழலால் இங்கே அடிப்படைக்கட்டுமானங்கள் அனைத்தும் சீரழிந்துவிட்டன. குப்பையே அள்ளப்படாமல் சாக்கடைக்குழி போன்று ஆகிவிட்டன இந்தியக்கிராமங்கள். பாசனமுறை அழிந்துவிட்டது. சாலைகள் இடிபாடுகளாகக் கிடக்கின்றன. உயர்மட்ட ஊழலால் தேசத்தின் செல்வம் அன்னியசக்திகள் கைக்கு அளிக்கப்படுகிறது. கோடானுகோடி பணம் அன்னியவங்கிகளுக்குச் சென்று முடங்குகிறது. இந்நிலைக்கு எதிரான கோபம் இளைஞர்கள் நடுவே எழுந்திருப்பது மிக இயல்பானது, அது ஓர் ஆக்கபூர்வ சக்தி என்பதில் ஐயமே இல்லை.

ஆனால் அதற்கு தேர்தலரசியலில் ஈடுபடுவது சரியானதாக இருக்குமா? இன்றைய இந்திய ஜனநாயகம் என்பது அதிகாரவிசைகளின் மோதலும் சமநிலையும்தான் என்னும்போது தேர்தலரசியல் வழியாக அடையப்படுவது என்ன? தேர்தலில் ஈடுபடும்போது முதலில் செய்யவேண்டியது அதிகாரவிசைகளில் வலுவானவற்றை தங்கள் தரப்பில் சேர்த்துக்கொள்வதுதான். ஆம் ஆத்மி அரசியலில் ஈடுபட்டதுமே செய்யநேர்ந்தது அதைத்தான். அது தன்னளவில் ஓர் அதிகாரவிசையை

ஏற்கனவே சேகரித்துக்கோண்டிருந்தது. அதில் டெல்லியின் படித்த நடுத்தரவர்க்கம் ஒருங்கிணைந்தது. ஆகவே அந்தவர்க்கத்தின் நலன்களை ஆம் ஆத்மி பேணியாகவேண்டும். அவர்களுடைய அதிகாரப்பிரதிநிதியாகச் செயல்பட்டு அவர்களின் நம்பிக்கையைத் தக்கவைத்துக்கொள்ளவேண்டும். அவர்களுடைய அத்துமீறல்களை கண்டுகொள்ளக் கூடாது. அவர்களின் அயோக்கியத்தனங்களை நியாயப்படுத்தியாகவேண்டும்.

தேர்தலரசியலில் ஈடுபட்டிருப்பது வரை இதுதான் விதி. டெல்லியின் நடுத்தரவர்க்கம் நூற்றுக்கணக்கான விதிமீறல்கள் வழியாகவே வாழ்ந்துகொண்டிருப்பது. வாடகைக்கு ரசீது கொடுத்தாகவேண்டும் என்பதுபோல நடுத்தரவர்க்கத்தைப்பாதிக்கக்கூடிய ஒரு சாதாரண சட்டநடவடிக்கை வரட்டும், நடுத்தர வர்க்கம் பொங்கி எழும். ஆம் ஆத்மி அவர்களுக்காக மட்டுமே பேசமுடியும், நியாயத்துக்காக அல்ல. சிறந்த உதாரணம் இடதுசாரிகள். அவர்கள் எல்லா நியாயமும் பேசுவார்கள், ஆனால் தொழிற்சங்க அரசியலின் ஊழலை நியாயப்படுத்துவார்கள். ஊழியர்களின் தவறுகளை ஆதரிப்பார்கள், வேறுவழியில்லை அவர்களுக்கு.

தேர்தலில் வெல்வதற்கு மேலும் மேலும் அதிகாரவிசைகளை ஆம் ஆத்மி கூட்டுச்சேர்த்துக்கொள்ளவேண்டியிருக்கும். இந்தத் தேர்தலிலேயே ஆம் ஆத்மி அந்தச் சமரசங்களை ஆரம்பித்துவிட்டது. டெல்லியில் நாற்பது சதவீதம் இருக்கும் இஸ்லாமியர் மிக வலுவான வாக்குவங்கி. அவர்களின் வாக்கு எப்போதுமே காங்கிரஸுக்குத்தான் சென்றுகொண்டிருந்தது. இந்திய இஸ்லாமியர் ஒரு குறிப்பிட்ட மனநிலை கொண்டவர்கள். அவர்கள் நெருக்கமாக வாழும் பகுதிகளை அவர்கள் கிட்டத்தட்ட 'விடுவிக்கப்பட்ட' பகுதிகளாக எண்ணுவார்கள். அங்கே காவலர்கள் வந்து சோதனைசெய்வதையே அநீதியாகவும் அத்துமீறலாகவும் எடுத்துக்கொள்வார்கள். டெல்லி தலைநகரம் என்பதனாலேயே பாதுகாப்பு ஏற்பாடுகளில் அரசு சமரசம் செய்துகொள்ளமுடியாது. ஆகவே அவர்களுக்கும் காங்கிரஸ் அரசுக்குமிடையே எப்போதுமே பூசல் இருந்தது.

காங்கிரஸ் அரசின் சோதனைகள் இஸ்லாமியரை அதிருப்தி கொள்ளச்செய்தன. 2008 செப்டம்பரில் பாட்லா ஹவுஸ் என்ற இடத்தில் நடந்த துப்பாக்கிச்சூட்டில் இரு தீவிரவாதிகள் கொல்லப்பட்டனர்இஸ்ரேல் தூதரகத்தில் குண்டு வைக்கச் சதி செய்ததாக சையத் முகமது அகமது காஸ்மி என்ற இதழாளர் 2012 மார்ச்சில் கைது செய்யப்பட்டார்.

இந்நிகழ்ச்சிகளில் அதிருப்தி கொண்டிருந்த இஸ்லாமியரின் வாக்குகளைக் கவர ஆம் ஆத்மி கட்சி முயன்றது. பரேலியின் மௌலானா தக்பீர் ரஸா கான் என்ற மத அடிப்படைவாதியின் உதவியை ஆம் ஆத்மி நாடியது. எழுத்தாளர் தஸ்லீமா நஸ்ரீனைக் கொல்வதற்காக ஃபத்வா விதித்தவர் இவர். அவருடைய ஆதரவுதான் ஆம் ஆத்மி கட்சியின் வெற்றிக்குக் காரணம் என்றுகூடச் சொல்லலாம்

இன்னும்பாதிக்கிணறுதான் தாண்டப்பட்டிருக்கிறது. ஆட்சிக்குவருவதற்கு இன்னும் பல அதிகார விசைகளை சேகரித்துக்கொள்ளவேண்டியிருக்கிறது. அவ்வாறு ஆட்சிக்கு வந்தபின் அந்த அதிகாரவிசைகளின் நலன்களைத்தான் ஆம் ஆத்மி கவனிக்கமுடியும். அதை முன்வைத்து மற்ற அதிகார விசைகளுடன் பேரம்பேசி சமரசத்தை எட்டுவதே அதன் வழியாக இருக்கும். அதில் என்ன ஊழல் ஒழிப்பைச் செய்யமுடியும்? ஊழலை அவர்கள் தனிப்பட்டமுறையில் செய்யாமல் இருக்கலாம். அதிகார இயந்திரம் ஊழலை நடைமுறையாக்கிக் கொண்டிருப்பதை தடுக்கமுடியாது. மிகச்சிறந்த உதாரணம் கேரளத்தில் ஏ.கே.அந்தோணி போன்றவர்களின் ஆட்சிதான். அந்தோணி ஊழலுக்கு அப்பாற்பட்டவர். ஆனால் அவரது அரசு எப்போதுமே ஊழலரசாகவே இருந்துள்ளது. அச்சுதானந்தனின் இடதுசாரி அரசும் அப்படித்தான்.

அப்படியென்றால் ஊழலரசியலை கட்டுப்படுத்த என்ன செய்திருக்கலாம்? ஊழலுக்குக் காரணமாக அமைந்திருப்பது நம் மக்களின் அடிப்படை மனநிலைதான். ஊழல் தனக்கு தன்குழுவுக்குச் சாதகமானதென்றால் அதை ஏற்க அவர்கள் தயாராக இருக்கிறார்கள். அந்த மனநிலையில் மாறுதலை உருவாக்குவதே முதற்பெரும் பணி. ஊழலின் விளைவாக ஒட்டுமொத்தமாக தேசத்துக்கும் அதனூடாக ஒவ்வொருவருக்கும் நிகழும் இழப்புகளை அவர்கள் உணரும்படிச் செய்யலாம். பெரும் பிரச்சார இயக்கங்களே அதற்கான வழிமுறைகள். போராட்டங்களைப்போல சிறந்த கருத்தியல்பிரச்சாரம் வேறில்லை. சென்றவருடம் அண்ணா ஹசாரே நிகழ்த்திய உண்ணாவிரதப்போராட்டம் அத்தகைய வலிமையான ஒரு பிரச்சார இயக்கம். இந்திய மக்களிடையே ஊழலுக்கெதிரான கசப்பை உருவாக்கியது அது. அதன் விளைவுகள் வட இந்திய அரசியலில் நேரடியாகவே பிரதிபலித்தன. பொது வாழ்க்கையில் நேர்மையை முன்வைக்கும் அரசியல்வாதிகள் அரசியல்தளத்தில் மேலதிக

முக்கியத்துவம் பெறவும் ஊழலரசியல்வாதிகள் பின்னடைவுபெறவும் அது காரணமாகியது.

ஊழலை மக்கள் தீவிரமாக எடுத்துக்கொள்கிறார்கள் என்ற செய்தியை அரசியல்வாதிகளிடையே கொண்டுசென்றது அண்ணா ஹசாரேவின் இயக்கம். அத்தகைய இயக்கங்கள் தொடர்ந்து நாடெங்கும் நிகழுமென்றால் அது அரசியல்வாதிகளை அச்சுறுத்தும். ஊழலைக் கட்டுப்படுத்தும் புதிய அதிகார விசை ஒன்றை அரசியலில் உருவாக்கும். பங்கீட்டு அரசியல் உடனடியாக நின்றுவிடாது. உயர்மட்ட ஊழலும் இருக்கும். ஆனால் இன்றுபோல அனைத்து நலப்பணிகளிலும் ஊழல் இருக்காது. அனைத்து விதிகளையும் ஊழல் ரத்து செய்யாது. அதுவே பிரமிப்பூட்டும் மாற்றமாக அமையும்

ஐரோப்பிய , அமெரிக்க அரசுகளெல்லாமே பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை ஊழலில் மூழ்கித்தான் கிடந்தன. அங்கே மாற்றத்தைக் கொண்டுவந்தவை ஊழலுக்கெதிராக மக்களின் மனநிலையை கட்டமைத்த வலுவான கருத்தியல் இயக்கங்கள்தான். மிகச்சிறந்த உதாரணம் அமெரிக்காவில் உருவாகிவந்த முன்னகர்வு காலகட்டம் [Progressive Era] 1890 முதல் 1920 வரை கால்நூற்றாண்டுக்கும் மேல் நீடித்த இக்காலகட்டத்தில் பொதுவாழ்க்கையில் ஊழலுக்கு எதிராக ஏராளமான இயக்கங்கள் உருவாகி வந்தன. ஊழல்வாதிகள் தொடர்ந்து மக்கள்முன் வெளிப்படுத்தப்பட்டார்கள். அதன் விளைவாகவே அமெரிக்காவில் ஊழலுக்கெதிரான மனநிலை மக்கள் நடுவே உருவானது. இன்றும் அமெரிக்காவில் அடிப்படைத்தளங்களில் ஊழல் இல்லாமலிருப்பது அவ்வியக்கத்தால்தான். அதற்கிணையான ஒன்றை இந்தியாவிலும் உண்டுபண்ணுவதே ஊழலுக்கெதிரான உண்மையான நடவடிக்கையாக இருக்கமுடியும்.

அதற்காக எல்லாவிதமான அமைப்புகளையும் பயன்படுத்திக்கொள்ளமுடியும். நீதிமன்றங்கள், இப்போது போராடிப்பெறப்பட்டிருக்கும் லோக்பால் போன்ற அமைப்புகள், தகவலறியும் உரிமைச்சட்டங்கள் எல்லாவற்றையும். உதாரணமாகச் சொல்கிறேன், இந்தியாவில் ஒரு சாலைபோடப்படுகிறதென்றால் அதன் 80 சதவீதம் ஊழலுக்குச் சென்றுவிடுகிறது. அந்த பணத்தை வழங்குவதற்கு எதிராக நீதிமன்றம் சென்று அச்சாலையை ஒரு பொதுவான பொறியாளர் பரிசோதனைசெய்யவேண்டும் என்று ஏன் கோரக்கூடாது? நாடெங்கும்

அவ்வளவு திட்டங்களிலும் அவ்வாறு தரத்தை சோதனையிடும் ஒரு மக்களமைப்பை ஏன் உருவாக்கமுடியாது? அது ஊழலைக் கட்டுப்படுத்துமளவுக்கு எந்த அரசியல் கட்சி செயல்படமுடியும்?

மிகச்சிறந்த உதாரணம், அமெரிக்காவில் ரால்ஃப் நாடர் உருவாக்கிய நுகர்வோர் இயக்கம். அமெரிக்காவின் கழுத்தறுப்பு வணிகத்தைக் கட்டுப்படுத்தும் வலுவான அதிகாரவிசையாக அது உருவாகி வந்தது . அரசியலதிகாரம் மூலம் அல்ல. நீதிமன்றங்கள் போன்ற ஏற்கனவே இருக்கும் அமைப்புகளை கையில் எடுத்துக்கொள்வதன் வழியாகவே , மக்களியக்கம் வழியாகவே அது நிகழ்ந்தது. உலகமெங்குமுள்ள பசுமை இயக்கங்களின் பணியும் அத்தகையதே.

இந்தியாவில் இன்று தேவையாக இருப்பவை ஊழலுக்கெதிரான அத்தகைய ஏராளமான சட்டபூர்வ,ஜனநாயக, மக்கள் அமைப்புகள், அரசியலுக்கு அப்பாற்பட்டு கருத்தியல்தளத்தில் செயல்படும் அதிகாரவிசைகள். அத்தகைய செயல்பாடுகளைச் செய்யும் தனிமனிதர்கள் இன்று ஏராளமாக உருவாகியிருக்கிறார்கள். கேரளத்தில் நவாப் ராஜேந்திரன் தமிழகத்தில் டிராஃபிக் ராமசாமி போன்ற 'எக்ஸெண்டிரிக்' தன்மை கொண்ட தனிமனிதர்கள் வெறும் நீதிமன்ற நடவடிக்கைகள் வழியாகவே அரசமைப்புகளின் ஊழலை தடுத்து நிறுத்தியிருக்கிறார்கள். நாடெங்கும் அத்தகைய பலநூறு செயல்பாட்டாளர்களைச் சுட்டிக்காட்டமுடியும். தனிமனிதர்கள் என்பதனாலேயே அவர்கள் பாதுகாப்பற்றவர்கள், நிதிவல்லமையற்றவர்கள். அவர்களை இணைக்கும் பெரிய இயக்கங்கள் அவர்களின் விசையை பலமடங்கு பெருக்கமுடியும். தனிமனிதராக அண்ணா ஹசாரே இன்று லோக்பால் அமைப்பை வென்றெடுத்திருக்கிறார். அந்தவெற்றியை மேலும் மேலும் முன்னெடுக்கமுடியும்

அரசியல்கட்சியும் தேர்தல்வெற்றியும் அரசைக்கைப்பற்றுவதும் அல்ல ஊழலை எதிர்ப்பதற்கான வழி. ஊழலை தன் செயல்விசையாகக் கொண்டிருக்கும் அரசமைக்கு நேர்எதிரான அமைப்புகளை உருவாக்குவதுதான். சமூகத்தின்மேலும் அரசின்மேலும் அந்த விசையைச் செலுத்துவதுதான். சமூகத்தையும் அரசையும் அவ்வாறு ஊழல்மயமாக்கியிருக்கும் காரணிகள் என்ன என்ற எந்த அறிதலும் இல்லாமல் அவற்றின் ஒருபகுதியாக மாறுவது அல்ல. அப்படி மாறிய பல அரசுகள் இந்திய சமகாலவரலாற்றில் உள்ளன. மிகச்சிறந்த உதாரணம்

அஸாமில் எண்பதுகளில் உருவான அஸாம் கணபரிஷத் இயக்கம். அதை வழிநடத்தியவர்கள் மாணவர்கள். அஸாமின் தன்னுரிமைக்காகவும் தனித்தன்மைக்காகவும் போராடிய ஒரு மக்களியக்கம் அது. அது அரசியல்கட்சியாக ஆகி ஆட்சியைப்பிடித்தது. பிரஃபுல்லகுமார் மகந்தா தலைமையில் அரசமைத்தது. அதிகாரப்பங்கீட்டுக்கான கருவியாக மாறி ஊழலில் மூழ்கி முகமிழந்து அழிந்தது. அதற்கெதிரான அடுத்த மக்களியக்கம் அங்கே தேவைப்பட்டது

இந்தியாவுக்குச் சொல்லபபடும் இந்த ஒவ்வொரு வார்த்தையும் ஏதேனும்வகையில் ஜனநாயகம் செயல்பட்டுக்கொண்டிருக்கும் ஒவ்வொரு மூன்றாமுலக நாட்டுக்கும் பொருந்துவதாகும். இலங்கைக்கும். சாரைப்பாம்பைத் தின்னும் ஊரில் நடுக்கண்டம் எனக்கு என கேட்டுவாங்கிச் சாப்பிட்டால்தான் பிழைக்கமுடியும் என்பது ஒரு மலையாளப்பழமொழி. அதிகார அரசியலில் ஈடுபடுபவர்கள் உச்சகட்ட அதிகாரத்தை நோக்கி மட்டுமே செல்லமுடியும். நடுக்கண்டம் தின்பவர்கள் ஒருபோதும் மாற்றத்தைக் கொண்டுவர முடியாது. விலகிநிற்பவர்களே அதைச்செய்யமுடியும்.

## (4) புகைத்திரை ஓவியம்

சிலவருடங்களுக்கு முன்பு தஞ்சையில் காவேரிக்கரையோரமாக பத்துநாட்கள் பயணம்செய்தேன். ஒரேமூச்சாக வேறுவேலைகளும் கவனங்களும் இல்லாமல் செய்யபப்டும் இத்தகையபயணங்கள் ஒரு நிலப்பகுதியைப்பற்றிய முழுமையான சித்திரத்தை அளிக்கவல்லவை என்பது என் அனுபவம். நம்முடைய அனுபவஅறிவும் இயல்பான நுண்ணுணர்வும் கவனமும் ஒருங்கிணைந்தாலே போதுமானது. உண்மையில் அப்பகுதியைப்பற்றி எழுதப்பட்ட பலநூறு ஆய்வுக்கட்டுரைகளை, தரவுத் தொகுப்புகளை அமர்ந்து வாசித்து பகுப்பாய்வுசெய்து பொதுமுடிவுகளுக்கு வருவதை விட இது உதவிகரமானது. ஏனென்றால் தரவுகளும் தரப்புகளும் பெரும்பாலும் பிறருடைய பார்வையால் கட்டமைக்கப்பட்டவை. நாம் பார்க்கும் ஒருகாட்சி நம்மால் மட்டுமே அர்த்தப்படுத்தப்படுகிறது.

அத்துடன் இன்னொன்றும் உண்டு. நாம் நேரடியாக ஈடுபடாத, நமக்குப்பங்களிப்பே இல்லாத ஓர் இடத்தை நாம் பார்க்கையில் அங்குள்ள காட்சிகளில் முக்கியமானவை- முக்கியமற்றவை, வேண்டியவை -வேண்டாதவை என்னும் பாகுபாடுகள் இல்லாமலாகின்றன. அனைத்தும் நம்மளவில் சமமானவை. அனைத்தும் நம்மில் அர்த்தப்பதிவுகளை உருவாக்குகின்றன. அந்நிலையில் சின்னஞ்சிறு விஷயங்கள் கூட குறியீடுகளாக ஆகி பெரிய வரலாறுகளை,சமூக மனநிலைகளைச் சுட்டுவனவாக ஆகிவிடுகின்றன. உதாரணமாக தஞ்சையின் சிறிய கிராமங்களில்கூட இருக்கும் 'தந்தைபெரியார் படிப்பகங்கள்'. அவை பெரும்பாலும் அறுபதுகளில் கட்டப்பட்ட சிறிய கட்டிடங்கள் ஒன்றிரண்டு பெஞ்சுகள். ஒரு டெஸ்க். அதில் நாலைந்து செய்தித்தாள்கள். சுவர்களில் பழைய பெரியார்,அண்ணா படங்கள். அபூர்வமாக நெடுஞ்செழியன், மதியழகன் படங்கள். அவை தஞ்சையில் ஓர் அலையென எழுந்து இன்று அடங்கிமறைந்த திராவிட இயக்கத்தின் எழுச்சியின் தடையங்கள்.

அத்தகைய ஒரு வாசிப்புசாலையில் ஒரு படம் சட்டமிடப்பட்டு மாட்டப்பட்டிருந்தது. வி.என்.ஜானகியும் விஜயகுமாரியும் நீண்டகைகள் கொண்ட ஜாக்கெட் அணிந்து, கோணவ்கிடு எடுத்து சீவி மலர்சூடிய

கூந்தலுடன், கைகளில் கறுப்பு – சிவப்பு கொடிகளை ஏந்தியிருந்தனர். ஜானகியின் கொடியில் எம்ஜிஆர் சுட்டுவிரலை தூக்கிக் காட்டினார்.விஜயகுமாரியின் கொடியில் எஸ்.எஸ்.ராஜேந்திரன்.நெடுநேரம் அந்தப்படத்தைப்பார்த்து அப்படியே நின்றுவிட்டேன். ஒரு காலப்பயணம் போல. நான் வாழாத ஒருகாலகட்டத்தில் என்னை வாழச்செய்தது அந்தப்படம். அத்தனை அறிதல்களையும் ஒரே கணத்தில் நிகழ்த்தும் கணத்தை அந்தப்படம் உருவாக்கியது. உண்மையில் அது ஒரு பரவசநிலை.புகைப்படங்கள் ஓவியங்களை விட வல்லமை கொள்ளும் தருணம் அது

ஐம்பதாண்டுகளுக்கு முந்தைய சாமானியனின் அரசியலையும் கனவையும் அந்தப்படம் காட்டுவதுபோலத்தோன்றியது. அந்த ஒருபடத்தில் இருந்து என்னென்ன அரசியல், சமூகவியல் , வரலாற்று ஊகங்களுக்குச் செல்லமுடியும் என எண்ணி வியந்துகொண்டேன். அந்தப்படத்தை உருவாக்கியவனின் மனநிலை என்ன? அதை விலைகொடுத்து வாங்கி சட்டமிட்டு மாட்டியவர்கள் எவ்வகை இளைஞர்கள்? அவர்கள் கனவுகண்ட சமூகம் என்ன? அவர்கள் அடைந்த எழுச்சிகள் ,சஞ்சலங்கள், ஏமாற்றங்கள் என்னென்ன?

1962 ல் பிறந்த நான் அந்தக்காலகட்டம் முற்றிலும் வடிய ஆரம்பித்த பின்புதான் நாளிதழ்களையே வாசிக்க ஆரம்பித்திருப்பேன். ஆயினும் அதை தகவல்களைக்கொண்டு வகுத்துக்கொண்டேன்.

இந்தியசுதந்திரப்போராட்டம்தான் இந்தியாவெங்கிலும் அரசியல்நடவடிக்கையை ஆரம்பித்துவைத்தது. அதற்குச் சில ஆண்டுகள் முன்னரே சென்னையிலும் மும்பையிலும் தலித் உரிமைகளுக்கான அரசியல் ஆரம்பித்திருந்தது. ஆனால் இந்திய சுதந்திரபோராட்டம் நாடுதழுவிய அலை. அது ஆரம்பித்தது 1918ல் காந்தி இந்தியாவுக்கு வந்து காங்கிரஸை மெல்ல கைப்பற்றியபின்னர்தான். அன்றுவரை காங்கிரஸின் உறுப்பினர் உரிமை நிபந்தனைக்குட்பட்டதாக இருந்தது. காந்தி அதை அனைவருக்கும் உரியதாக ஆக்கினார். அச்செயல் காங்கிரஸை சட்டென்று பெரும் மக்களியக்கமாக ஆக்கியது. காங்கிரஸ் இந்தியாவின் அனைத்து மூலைகளுக்கும் அரசியலை கொண்டுசென்று சேர்ந்தது. அங்குள்ளவர்களை இந்தியா என்ற பெரும் நிலப்பரப்பின் குடிமக்களாக

உணரச்செய்தது. மொத்த இந்தியர்களின் நலன்களைப்பற்றிக் கவலைப்படச்செய்தது. அது ஓர் இலட்சியவாத அரசியல் அலை எனலாம்

1935ல் காங்கிரஸ் பிரிட்டிஷாரிடமிருந்து மாகாணசபைகளில் ஆட்சியமைப்பதற்கான உரிமையை வென்றெடுத்து தேர்தலரசியலில் நுழைந்ததும் அதிகார அரசியல் இந்தியாவில் ஆரம்பித்தது. ஆரம்பித்த கணமே அது காங்கிரஸை உடைத்தது. தேர்தலில் போட்டியிடும் பொருட்டு காங்கிரஸில் இருந்து வெளியேறிய சுயராஜ்யக்கட்சியின் பிளவின் பின்னடைவை காங்கிரஸ் தாண்டிவர காந்தியின் ஆறுவருடக்கால கடும் உழைப்பு தேவையாகியது. மனம்சோர்ந்த அவர் கிட்டத்தட்ட அரசியலைவிட்டே விலகி கிராமசேவைப்பணிகளில் ஈடுபடத் தொடங்கினார். தன்னைச்சூழ்ந்திருந்த அனைவரும் அதிகரா அரசியலின் வேட்பாளர்கள் என உணர்ந்த காந்தி அதற்கு முற்றிலும் அப்பாற்பட்டவர்களான ஒரு தொண்டர்படையை அமைத்தார். அந்த தொண்டர்களுடன் அவர் மீண்டும் அரசியலுக்கு வந்தார். அவருடைய இலட்சியவாத அரசியலின் வீரர்களாக அவர்களே கடைசிவரைத் திகழ்ந்தனர்.

முதற்கட்ட இலட்சியவாத அரசியல் அல்ல, தேர்தல்களின் விளைவாக உருவான அடுத்தகட்ட அதிகார அரசியல்தான் இந்தியாவை அரசியல்மயமாக்கியது என்பதுதான் உண்மை.இந்தியாவில் தேசிய அளவில் தேர்தல்கள் ஆரம்பித்த 1935 லேயே அவை அனைத்துச் சமூகக்குழுக்களும், சாதிகளும் தங்கள் அதிகாரத்துக்காக முட்டிமோதிச் சண்டையிடும் களமாக ஆகிவிட்டன. அதிலிருந்து எவரும் விலகிநிற்கமுடியாதென்ற நிலை உருவாகியது. அன்றைய இலக்கியப்படைப்புகள் அன்று மாகாணசபைகளுக்கும் நகரசபைகளுக்கும் நிகழ்ந்த தேர்தல்களில் பணபலமும் சாதியப்பின்னணியும் எப்படி முதன்மைப்பங்காற்றின என்பதைக் காட்டுகின்றன. பிரிட்டிஷ் யானை உண்ட கவளத்தில் சில பருக்கைகள் சிந்தின. அவற்றை உண்ண எறும்புகள் ஒன்றை ஒன்று முட்டிமோதி முன்சென்றன.

இந்திய அரசியலின் மூன்றாவது கட்டம் என்பது 1952ன் சுதந்திர இந்தியாவின் முதல்பொதுத்தேர்தலில் ஆரம்பிக்கிறது. அதுவரைக்கும் வரிகட்டுபவர்களுக்கு மட்டுமே இருந்த வாக்குரிமை வயதுவந்த அனைவருக்கும் அளிக்கப்பட்டது. விளைவாக இந்தியாவின் அத்தனைகுடிமக்களும் அரசியலில் ஈடுபட்டேயாகவேண்டும் என்ற

நிலைவந்தது. கும்பிட்டகைகளுடன் அரசியல்வாதிகள் அடித்தளமக்களைத் தேடிவந்தனர். அடித்தளமக்கள் அந்த அரசியல்வாதிகளை தங்களுக்குப் பயன்படுத்துவதெப்படி என சிந்திக்கத்தொடங்கினர். சாதிகளாக, மதங்களாக, வட்டாரங்களாகத் திரள்வது வாக்கரசியலில் வலிமையை அளிக்கும் என மக்கள் கண்டுகொண்டனர். அவர்களை அப்படித் திரட்டுவது அரசியல் ரீதியாக பலன் தருவது என அரசியல்வாதிகளும் கண்டடைந்தனர். இலட்சியவாத அரசியல் முழுமையாகவே மறைந்தது. அதிகார அரசியலில் தங்கள் பங்கைப்பெறுவதற்கு ஒன்றுதிரள்வதே வழி என்று ஒவ்வொரு சமூகக்குழுவும் எண்ண ஆரம்பித்தபோது இன்றைய ப்ங்கீட்டு அரசியல் ஆரம்பித்தது.

இந்தியாமுழுக்க பங்கீட்டு அரசியல் பல வடிவங்களில் பல பாவனைகளில் முன்வைக்கப்பட்டிருக்கிறது. அன்று அரசியல் என்பது இலட்சியவாதம் சார்ந்ததாகவே இருந்தாகவேண்டும் என்ற பொதுவான நம்பிக்கை இருந்தது. அத்துடன் அரசியல்சட்டமும் பிரிவினைநோக்குள்ள அரசியலை எதிர்த்தது. ஆகவே சாதிசார்ந்த மதம்சார்ந்த அரசியல் மேல்பூச்சுக்கு ஒருவகை இலட்சியவாதத்தை உருவாக்கிக் கொண்டது. பஞ்சாபிசுபா போன்ற சில இயக்கங்கள் தெளிவான பிரிவினை அரசியல்முகத்தைக் கொண்டிருந்தாலும் பிறபகுதிகளில் உள்ள அரசியலியக்கங்கள் ஒருவகை இலட்சியவாதத்தை மேல்தளத்தில் முன்வைத்தன. அந்த இலட்சியவாத முகம் இளைஞர்களை உள்ளே இழுத்து தொண்டர்களை உருவாக்கியது. நடைமுறைத்தன்மை கொண்ட பங்கீட்டுஅரசியல் சமூகஅதிகார விசைகளை ஒருங்கிணைத்தது.

தமிழகத்தின் பிற்படுத்தப்பட்ட சாதிகளின் அரசியல் ஆசைகள் 1925 முதலே வலுவாகத் தொடங்கிவிட்டாலும் தேர்தலரசியல் வலுப்பெறும்தோறும் வளர்ந்தது. காங்கிரஸுக்குள் அது ஒரு அதிகாரத் தரப்பாக வலுவடைந்தது. ஜஸ்டிஸ்கட்சியில் மேலும் வல்லமைகொண்ட அந்தத்தரப்பு படிப்படியாக திராவிட இயக்கத்தை உருவாக்கிக் கொண்டது. இடஒதுகீட்டு அரசியல் வழியாக அது வலுவடைந்து மெல்ல ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்றியது.இந்த பங்கீட்டுஅரசியல் எழுச்சியின் புறவயமான இலட்சியவாத முகம் என்பது மொழிப்பற்றாகவும் இனப்பற்றாகவும் இருந்தது.

இலட்சியவாதம் வழியாக அடையப்போகும் ஒரு பொன்னுலகை மக்கள் முன் காட்டியாகவேண்டிய அவசியம் இருந்தது. காங்கிரஸும் கம்யூனிஸ்டுக் கட்சியும் அந்த பொன்னுலகை எதிர்காலத்தில் சுட்டிக்காட்டின. திராவிட இயக்கம் அதை இறந்தகாலத்தில் சுட்டிக்காட்டியது. இழந்துவிட்ட ஒரு மகத்தான காலகட்டத்தை அலங்காரமும் உணர்ச்சிகரமும் கொண்ட சொற்கள் வழியாக அது மக்கள் மனத்தில் நிறுவியது. ஏற்கனவே தமிழகத்தில் வலுவாகநிகழ்ந்திருந்த தமிழியக்கத்தில் இருந்து அந்தக்கனவை அது கடன்வாங்கியது. சங்ககாலம் என்ற பொற்காலகட்டம். காதல்,மானம்,வீரம் என்னும் விழுமியங்கள். சிலம்பு ,குறள் போன்ற நூல்கள். கரிகாலன் செங்குட்டுவன் இளஞ்செழியன் போன்ற மாமன்னர்கள், குதிரைகள், உடைவாள்கள், வேல்கள், வேங்கைகள், அடலேறுகள், கடல்கடந்துசெல்லும் நாவாய்கள்... அவற்றை எதிர்கொண்டவர்கள் பெரும்பாலும் அன்று அடிப்படைக் கல்விகற்ற முதல்தலைமுறையிரான பிற்படுத்தப்பட்ட சாதிகளைச் சேர்ந்த இளைஞர்கள். அவர்களின் சாதியமரபும் குடும்பமும் அவர்களுக்கு இறந்தகால மேன்மை என எதையும் அளிக்கவில்லை. எந்தக் கனவையும் அவர்கள் அடைந்திருக்கவில்லை. திராவிட இயக்கம் அதை அளித்தது

எதிர்காலம் பற்றிய கனவை உருவாக்க மாபெரும் தத்துவஞானிகளாலேயே முடியும், மார்க்ஸ் அல்லது காந்திபோல. இறந்தகாலம் பற்றிய கனவை அதைவிட எளிதில் உருவாக்கிவிடலாம். ஏனென்றால் அது ஏற்கனவே முளைக்காதவிதை வடிவில் மக்களிடம் இருந்துகொண்டிருக்கிறது. மூதாதைவழிபாடாக அது மாற்றப்பட்டிருக்கும். எந்தப்பழங்குடிச்சமூகமும் மாபெரும் இறந்தகாலப் பொன்னுலகம் ஒன்றைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருக்கும். அது அவர்களின் சமகாலத்தின்மேல் இறந்தகாலத்தின் அதிகாரத்தை நீட்டிக்க உதவும். சமகாலத்தில் சென்றகாலத்தின் விழுமியங்களை ஏற்றிவைக்க உதவும். நிகழ்காலத்தை சென்றகாலத்தின் மரபில் இணைக்க உதவும். ஆகவே சென்றகாலத்தைய சிறப்பைச் சொன்னால் எந்த ஒரு சமூகமும் அதை மறுக்கத்துணியாது. அந்தச் சிறப்பு முற்றிலும் கற்பனை என அது அறிந்திருந்தாலும் அதை ஏற்கும் மனநிலையிலேயே இருந்துகொண்டிருக்கும். அதை ஒருபோதும் தர்க்கபூர்வமாக அணுகாது. ஆகவேதான் ஃபாசிசத்தின் கருவியாக, அடிப்படைவாதத்தின் ஆயுதமாக என்றுமிருப்பது சென்றகாலம் பற்றிய

கனவு. இனம், மொழி, மதம், வட்டாரம் சார்ந்து சமைக்கப்பட்ட ஒரு இறந்தகாலப் பொன்னொளி

காங்கிரஸும் கம்யூனிஸ்டுகளும் பொன்னுலகத்தை மக்களின் அறிவை நோக்கி முன்வைத்தனர். திராவிட இயக்கம் அதை மக்களின் உணர்ச்சியையும் கனவையும் நோக்கி முன்வைத்தது. ஆகவேதான் பிற இரு சாராரைவிடவும் அவர்கள் அதிகமாக கலையை பயன்படுத்தினார்கள். அவர்களின் மேடைப்பேச்சு கருத்துப்பகிர்வே அல்ல, அது ஒரு நிகழ்த்துகலை. சி.என்.அண்ணாத்துரையின் பல உரைகளை நான் ஒலிப்பதிவில் கேட்டிருக்கிறேன். அவற்றில் அவர் சொல்லும் கருத்து என்பது ஒற்றைவரியில் முடிந்துவிடக்கூடியது. ஆனால் சுழலும் சொற்கள், ஓசையொழுங்குடன் துள்ளும் சொற்றொடர் அமைப்புகள், பாமரருக்கான நகைச்சுவை என அது ஒரு கலைநிகழ்ச்சி போலிருக்கும். தமிழகத்தில் அன்று புகழ்பெற்றிருந்த புராணக்கதைகூறலுக்கும், தெருக்கூத்துக்கும் திராவிட இயக்கத்தின் மேடையுரைகளுடன் இருந்த ஒற்றுமையை ஆச்சரியத்துடன் கவனிக்கலாம். மேடையில் கிட்டத்தட்ட நடனமிடுவார்கள். குரல்வித்தை காட்டுவார்கள். நகைச்சுவைத்துணுக்குகளை நடிப்பார்கள். மனப்பாடப்பகுதிகளை சரசரவென ஒப்பித்து கைத்தட்டல் வாங்குவார்கள்.

திராவிட இயக்கம் நாடகத்துக்கும் பின்னர் சினிமாவுக்கும் வந்த பாதை இது. அவர்களின் நாடகமும் சினிமாவும்கூட மேடைப்பேச்சுதான். மிகச்சிறந்த உதாரணம் பராசக்தி. அதில் சிவாஜிகணேசன் நீதிமன்றத்தில் பேசும் காட்சி நேரடியாகவே ஒரு திராவிட இயக்க மேடைப்பேச்சு. அதில் பிச்சைக்காரர் நலவாழ்வு பற்றி எஸ்.எஸ்.ராஜேந்திரன் பேசுவதுபோல சிறிய மேடைப்பேச்சுக்கள் பத்துக்கும் மேல் உள்ளன. மெல்ல சினிமா திராவிட இயக்கத்தின் அதிகாரபூர்வ கலையாக ஆகியது. தமிழகத்தின் பிரபலமான கலைகளான தெருக்கூத்து, நாடகம், பாவைக்கூத்து, கதாகாலட்சேபம், மரபிசை, நாட்டாரிசை ஆகிய அனைத்தையும் ஒருங்கிணைத்துக்கொண்ட சினிமா தமிழர்களின் நிரந்தரப் போதையாக மாறியது. அதில் ஏறி திராவிட இயக்க்கம் தமிழகத்தின் மக்களியக்கமாக ஆகியது. ஆட்சியைக் கைப்பற்றியது.அங்கு தொடங்கிய பங்கீட்டு அரசியல் இன்று நேரடியான சாதிய அரசியலாக மாறி முழுமைகொண்டிருக்கிறது. இலட்சியவாத அரசியல் என்பது பழங்கதையாக மாறிவிட்டிருக்கிறது.

திராவிட இயக்கத்தின் வரலாற்றைக் கூர்ந்து பார்ப்பவர்கள் அது சினிமாவைக் கைப்பற்றியபின்னரே மக்களியக்கமாக ஆனது என்பதைக் காணலாம். அதன் அரசியல் உள்ளடக்கம் என்பது பிற்படுத்தப்பட்டோரின் அரசியலதிகார விழைவு. ஆனால் அதை முன்னெடுத்துச் சென்றது சினிமா வழியாக அது முன்வைத்த பொற்காலக் கனவு. அன்றைய இளைஞர்களை அதைநோக்கி இழுத்தது அக்கனவுதான். அக்கனவை சினிமாவில் சொன்ன நடிகர்கள் மிக விரைவிலேயே தலைவர்களைவிட செல்வாக்கு பெற்றார்கள். சி.என்.அண்ணாத்துரை பேசும் அரங்கில் எம்.ஜி.ஆர் பேசிமுடித்ததும் முக்கால்வாசி பார்வையாளர்க்ளும் கிளம்பிச்செல்வது பலமுறை நிகழ்ந்திருக்கிறது. எம்.ஜி.ஆர் தன் முக்கியத்துவத்தை காட்ட அதை திட்டமிட்டு நிகழ்த்தியிருக்கிறார்.திராவிட இயக்கம் அடைந்த அனைத்து அரசியல்வெற்றிகளும் எம்.ஜி.ஆர், எஸ்.எஸ்.ஆர் போன்ற நடிகர்களின் பங்களிப்பால் விளைந்தவையே. 'தம்பி உன் முகத்தை மட்டும் கொடு, வெற்றிபெறுவேன்' என அண்ணாத்துரை எம்.ஜி.ஆரிடம் கோரியது வரலாறு

எஸ்.எஸ்.ராஜேந்திரன் மிகக்குறுகிய கால அளவில் தி.மு.கவின் இரு நடிகமுகங்களில் ஒன்றாக இருந்திருக்கிறார். சரளமான வசன உச்சரிப்பும், திராவிட இயக்கத்தினர் பெரிதும் விரும்பிய செந்நிறத்தோலும் கொண்டவர் அவ்ர். ஆனால் அவர் மிக விரைவிலேயே வீழ்ச்சியடைந்தார். அவரது வீழ்ச்சி எம்.ஜி.ஆர் , மு.கருணாநிதி இருவரும் இணைந்து நிகழ்த்தியது என்று கேட்டிருக்கிறேன். அதைவிட அரசியலில் நீடிப்பதற்கான திறமைகள் அவருக்கில்லை என்பதே காரணம் என நான் ஊகிக்கிறேன். எம்.ஜி.ஆரிடம் வெற்றியைநோக்கிக் கொண்டுசென்ற மூன்று அம்சங்கள் இருந்தன. திரையிலும் வெளியிலும் ஒரு தெளிவான நாயக பிம்பத்தை கட்டமைத்த கவனம், தனக்கென ஓர் ரசிகர் அமைப்பை உருவாக்கிக்கொள்ளும் அமைப்புத்திறன், வலுவான தொடர்புகளை பேணும் நிதானம். மூன்றுமே எஸ்.எஸ்.ராஜேந்திரனிடம் இருக்கவில்லை.

அவர்கள் இருவரும் தி.மு.கவின் முகங்களாக அறியப்பட்ட அந்த குறுகிய காலகட்டத்தில் உருவாக்கப்பட்ட படம் அது. அதில் அன்றைய எளிய தி.மு,க தொண்டனின் கனவு இருந்தது. அழகிய நாயகன். அரும்புமீசை, செந்நிறம் [படத்தில் கிட்டத்தட்ட ரத்தச்சிவப்பு] சுருள்முடி, உயர்தர ஆடைகள். கொள்கைப்பற்று அல்லது இலட்சியவாதம் கொண்டவன். அத்துடன் அழகிய பெண்கள் அவர்களை நெஞ்சில் ஏற்றியிருக்கிறார்கள்! அவர்கள் அவன்

கொள்கைகளை ஏற்றுக்கொண்டு அவனுக்குத் தோள்கொடுக்கிறார்கள். அனைத்தும் அந்தப்படத்தில் இருந்தது. சங்ககாலம் போலவே தி.மு.க அன்று உருவாக்கிய ஒரு சமகாலக் கனவு. அந்தப்படத்தில் இருந்த பகற்கனவு தமிழகத்தின் தலைவிதியைத் தீர்மானித்த விசை என்றால் ஆச்சரியமில்லை.

விஜயகுமாரியை மிகவிரைவிலேயே எஸ்.எஸ்.ராஜேந்திரன் விவாகரத்து செய்தார். அதற்கு முன் திருமணமான நாளில் இருந்தே அவர்களின் உறவு மிக வன்முறை மிக்கதாக, துன்பம் நிறைந்ததாக இருந்தது. எம்.ஜி.ஆர் இன்னொருவரின் மனைவியாக இருந்த வி.என்.ஜானகியை மணந்தாலும் அவர் பலகதாநாயகிகளுடன் உறவுள்ளவராக இருந்தார் என்பது தமிழகம் அறிந்தது. அந்தப்படத்தை அமைத்தவர் கண்ட கனவுக்கும் அவர்களின் உண்மைவாழ்க்கைக்கும் தொடர்பே இல்லை.. ஆனால் என்றாவது யதார்த்தம் கனவுகளை உருவாக்குவதற்குத் தடையாக இருந்ததுண்டா என்ன?

## (5) புயலும் மகரந்தங்களும்

‘எந்த தத்துவமேதையும் பொதுச்சிந்தனையில் அதிகபட்சம் பத்துமேற்கோள்களாகத்தான் அறியப்படுவான்’ என்று ஒருமுறை என் ஆசிரியரும் கீழைத்தத்துவச் சிந்தனையாளருமான நித்ய சைதன்ய யதி சொன்னார். தத்துவமேதை ஹெகலின் எழுத்துக்களின் முழுத்தொகுப்பு நூல்கள் அடுக்கடுக்காக அவரது குருகுலத்து நூலகத்தில் இருந்தன. அந்த பல்லாயிரம் பக்கங்களை பார்த்துக்கொண்டிருந்தபோது அவர் அதைச் சொல்லிக்கேட்டது திகைப்பளிப்பதாக இருந்தது.

‘அப்படியென்றால் எதற்காக ஹெகல் இத்தனை பக்கங்கள் எழுதினார்?’ என்று நான் கேட்டேன். ‘ஒரு முதற்சிந்தனையை முன்வைத்து, அதன் மேல் எழும் அனைத்துக்கேள்விகளுக்கும் விடையளித்து வாதிட்டு நிறுவ அத்தனை பக்கங்கள் எழுதாமல் முடியாது. அவ்வாறு நிறுவப்பட்ட சிந்தனைகள் மட்டுமே பொதுச்சிந்தனையில் அவ்வாறு பாதிப்பைச் செலுத்தமுடியும்’ என்றார் நித்யா.

ஒரேசமயம் சோர்வையும் உத்வேகத்தையும் ஊட்டும் உண்மை இது. மாபெரும் தவத்தின் விளைவுகள் காலத்தால் சுருக்கிச்சிறிதாக்கப்பட்டு மாத்திரைகளாக ஆவது சோர்வளிக்கிறது. ஆனால் அத்தகைய தவங்கள் காலகாலமாக நிகழ்ந்துகொண்டே இருப்பதில் உள்ள அடிப்படை மானுட எழுச்சி உத்வேகத்தையும் அளிக்கிறது.

சமீபத்தில் காந்தியம் என்றால் என்ன என்று ஐநூறு சொற்களில் ஒரு கட்டுரை எழுதியபோது நித்யாவின் அச்சொற்களை நினைவுகூர்ந்தேன். காந்தி ஐம்பதாயிரம் பக்கங்களுக்குமேல் எழுதியிருக்கிறார்.ஆனால் அந்த ஐநூறுவார்த்தையளவுக்குக் கூட அவரது சிந்தனைகள் பொதுச்சிந்தனையில் எஞ்சவில்லை. அவற்றைஎடுத்துச் சொல்லவேண்டியிருக்கிறது. ஆனால் அவ்வாறு எஞ்சியவை சென்ற நூற்றாண்டின் அரசியலில், சமூகவியலில், சூழியலில் பிரமிக்கத்தக்க மாற்றத்தை உருவாக்கியிருக்கின்றன.

காந்தி அரசியல் செயல்பாட்டாளர். அவரது பாதிப்பு நேரடியாக அளவிடத்தக்கது. ஆனால் நூலகங்களில் அரவிந்தரின் தொகைநூல்களைப்

பார்க்கையில் தத்துவஞானிகள் எழுதும் பல்லாயிரம் பக்கங்களின் மதிப்பென்ன என்ற வினா எழுகிறது. காரம் விளையாட்டின் சிவப்புவில்லை போன்றவர்கள் அவரக்ள். அவர்கள் வேறு வில்லைகளைத் தாக்கித்தான் தங்களை நிகழ்த்தமுடியும். தத்துவம் அரசியலிலும் இலக்கியத்திலும் ஆற்றும் பாதிப்பின் வழியாக மட்டுமே செயல்படமுடியும்.

ஆனாலும் சலிக்காமல் மேதைகள் செயல்பட்டிருக்கிறார்கள். பொதுச்சிந்தனை என்பது கருங்கல்லால் ஆன மாபெரும் தூண். அதை அனைத்து உயிர்வேகத்தைக்கொண்டும் உந்தினால்தான் சற்றேனும் அசைக்கமுடியும். ஒவ்வொரு காலகட்டத்திலும் பல்லாயிரம்பேர் சிந்தனைத் தளத்தில் செயல்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அனைவருமே ஏதேனும் ஒரு விசையை நிகழ்த்தியிருக்கிறார்கள். ஆனால் மிகமிகச் சிலரின் பங்களிப்பை மட்டுமே நம்மால் பிரித்தறிய முடியும்.

பொதுச்சிந்தனை என்றால் உண்மையில் என்ன?. என்வரையில் இப்படி வரையறுத்துக்கொள்கிறேன். 'அன்றாடவாழ்க்கையில் புழக்கத்தில் இருக்கும் அனைத்து அடிப்படை விஷயங்களைப்பற்றியும் குறைந்தபட்சப் புரிதலுக்குத் தேவையான சிந்தனைகளின் களம்'.

பொதுச்சிந்தனை நேரடியாக வாழ்க்கையுடன் கொண்டுள்ள தொடர்பின் அடிப்படையிலேயே உருவாகிறது. ஆகவே எப்போதும் அதில் முதன்மை இடம்பெறுவது அரசியலே. அரசியலுடன் நேரடியாகத் தொடர்புடைய சமூகவியல் அடுத்தபடியாக. அதன்பின் அறநெறிகள். அறநெறிகளை விவாதிக்கும் தன்மைகொண்டவையாதலால் இலக்கியம் அதற்குப்பின்பு வாழ்க்கையுடன் ஊடாடும் தொழில்நுட்பம் அதைத்தொடர்ந்து முதன்மைபெறுகிறது. தத்துவமும் பிரபஞ்சவியலும் அவை அரசியலுடனும் நெறிகளுடனும் எவ்வகையில் தொடர்புகொள்கின்றன என்பதை ஒட்டி மட்டும் முக்கியத்துவம் பெறுகின்றன.

பொதுச்சிந்தனைத்தளம் என்பது ஒருவகையில் ஒரு சராசரிதான். ஒரு சமூகத்தில் பேசப்படும் உச்சகட்ட கருத்துக்களுக்கும் அவைசார்ந்து உருவாகும் குறைந்தபட்சப்புரிதலுக்கும் நடுவே ஒரு இடத்தில் நாம் அதை வகுத்துக்கொள்கிறோம். அதை தெளிவாக தொகுத்துச் சொல்ல

முடியாதென்றாலும் எப்படியோ அதை உணர்ந்துகொண்டேதான் இருக்கிறோம்.

ஒருசமூகத்தில் வந்து விழும் பல்வேறுகருத்துக்கள் முட்டி மோதி உருவாகும் முரணியக்கத்தின் சமநிலைப்புள்ளியாக அந்த பொதுச்சிந்தனை உருவாகிறது என்று உருவகித்துக்கொள்ளலாம். இன்றைய தமிழ்ச்சமூகத்தை எடுத்துக்கொண்டால் மரபான இந்துமதச்சிந்தனை ஒரு மைய ஓட்டம். கிறித்தவ இஸ்லாமியச் சிந்தனைகள் கூடவே செல்பவை. தேசிய இயக்க காலகட்டத்தில் உருவான சுதந்திரஜனநாயகச் சிந்தனைகளும் பின்னர் வந்த்க இடதுசாரிச் சிந்தனைகளும் வலுவான பங்களிப்பை ஆற்றுகின்றன. இந்தச்சிந்தனைச்சரடுகளின் இழுவிசையின் மையமே இன்றைய பொதுச்சிந்தனை எனலாம்.

இந்தச்சமநிலைப்புள்ளி தொடர்ந்து உருமாறியபடியே இருக்கிறது. பொதுச்சிந்தனை தொடர்ந்து ஊடகங்கள் வழியாகவும், மக்களின் உரையாடல்கள் வழியாகவும் திரட்டி உருவாக்கப்பட்டபடியே இருக்கிறது. ஒருவகையில் மொழியில் நிகழும் அனைத்துச்செயல்பாடுகளும் பொதுச்சிந்தனையை உருவாக்கும் முயற்சிகளே என்று சொல்லலாம். சென்ற நிலப்பிரபுத்துவ யுகத்தில் பொதுச்சிந்தனை மதம் சார்ந்தும் நெறிகள்.சார்ந்தும் திரட்டப்பட்டு நடைமுறையில் இருந்தது. அதன் மாற்றம் மிக மெல்ல நிகழ்ந்தது.

சென்ற நூற்றைம்பதாண்டுக்காலத்தில் இந்தியப் பொதுச்சிந்தனையில் என்னென்ன மாற்றங்கள் நிகழ்ந்தன என்று ஒட்டுமொத்தமாகத் தொகுத்து நோக்கலாம். நூற்றைம்பதாண்டுக்காலம் முன்பு இந்தியாவில் எழுந்த முதற்பெரும் கருத்தியல் அலை என்பது இந்துமதச்சீர்திருத்த இயக்கங்களால் உருவாக்கப்பட்டது. இந்துமதத்தின் ஆசாரங்களும் நம்பிக்கைகளும் கொள்கைகளும் வாழ்க்கையின் அனைத்து பகுதிகளையும் கட்டுப்படுத்தியிருந்த காலகட்டத்தில் மதத்தை சீர்திருத்தாமல் வாழ்க்கை முன்னகரமுடியாதென்ற நிலை உருவானது. ஆகவேதான் ஞானிகளும் சிந்தனையாளர்களும் மதத்தை மறுபரிசீலனை செய்யத் தொடங்கினர்

பிரம்மசமாஜம்,ஆரியசமாஜம், ராமகிருஷ்ண இயக்கம், வள்ளலார் இயக்கம், நாராயணகுருவின் இயக்கம் போன்ற அனைத்துக்கும் இடையேயான ஒற்றுமைகள் சில உண்டு. ஆசாரங்களையும் மதத்தையும் பிரித்துப்பார்த்தல், சடங்குகள் மற்றும் நம்பிக்கைகளுக்குப் பதிலாக

மதத்தின் தத்துவத்தையும் மெய்யியலையும் முன்னிலைப்படுத்துதல், மதத்தின் அதிகாரக் கட்டுமானத்தை எளியவர்களுக்குச் சாதகமாக ஆக்குதல் ஆகியவை அவை.

இந்த மதச்சீர்திருத்த அமைப்புகள் இந்தியாவின் பொதுச்சிந்தனையில் நவீன காலகட்டத்தை நோக்கிய முதல் முன்னகர்வை உருவாக்கின என்று சொல்லலாம். இன்றும் கூட இந்த மதச்சீர்திருத்த அமைப்புகளின் வழிவந்த சிந்தனையாளர்கள், கலைஞர்கள், எழுத்தாளர்களின் பாதிப்பும் நம் பொதுச்சிந்தனையில் உள்ளது. உதாரணமாக வள்ளலாரை கருத்தில்கொள்ளாமல் தமிழ்ச்சிந்தனையையோ நாராயணகுருவை எண்ணாமல் மலையாளச் சிந்தனையையோ பேசவே முடியாது.

இந்துமதச்சீர்திருத்த இயக்கங்களே இந்திய தேசிய இயக்கங்களின் அடிப்படைகளை அமைத்தன. தேசிய இயக்கம் இந்தியாவில் சில அடிப்படைச் சிந்தனைகளை அறிமுகம் செய்தது. அதன் உண்மையான பங்களிப்பே அதுதான் என்றுகூடச் சொல்லலாம். அவற்றை இவ்வாறு தொகுத்துக்கொள்லலாம். அனைவருக்குமான பொதுநீதி, தனிமனிதனின் சமூக உரிமைகள், அனைத்துத் தளத்திலும் மனிதர்கள் சமமானவர்களே என்ற எண்ணம், அரசியலைத் தீர்மானிப்பதில் மக்களின் பங்களிப்பு. ஒட்டுமொத்தமாக இவற்றை நவீனஜனநாயகக் கருத்துக்கள் எனலாம்.

கோகலே, திலகர், காந்தி, நேரு போன்ற தேசிய இயக்கத் தலைவர்கள் தொடர்ச்சியாக இச்சிந்தனைகளை ஊடகங்கள் வழியாக இந்தியாவின் பொதுச்சிந்தனையை நோக்கி முன்வைத்தனர்.அவர்களை ஆதர்சமாகக் கொண்ட நூற்றுக்கணக்கான பேச்சாளர்களும் எழுத்தாளர்களும் அச்சிந்தனைகளை மொழியின் ஒவ்வொரு வடிவிலும் ஒவ்வொரு தருணத்திலும் ஒலிக்கும்படிச் செய்தனர். பாரதி முதல் கல்கி வரை , சத்யமூர்த்தி முதல் ம..பொ.சி வரை இங்கே செயல்பட்டவர்கள் நம் பொதுச்சிந்தனையில் ஆற்றிய பங்களிப்பை திட்டவட்டமாக வரையறைசெய்யமுடியும்

தேசிய இயக்கத்தின் எதிர்வினையாக நவீன ஜனநாயகச் சிந்தனையாளர்களின் ஒரு வரிசை இங்கே உருவானது. அம்பேத்கர், எம்.என்.ராய், ராம் மனோகர் லோகியா போன்றவர்கள். அவர்களுடைய சிந்தனைகளும் பல்வேறு வடிவில் தொடர்ச்சியாக நம்முடைய பொதுசிந்தனையை இயக்கி முன்னெடுத்துச்சென்றன. அவர்கள் தான் நம்

இன்றைய இலக்கிய, வரலாறு, சமூகவியல் நோக்குகளை வடிவமைத்திருக்கிறார்கள் என்பதைக் காணலாம். தமிழகத்தில் க.நா.சு முதல் சுந்தர ராமசாமி வரையிலான எழுத்தாளர்களிடம் அவர்களின் செல்வாக்கு உள்ளது.

இந்தியாவைப்பொறுத்தவரை மார்க்சியச் சிந்தனைகள் 1930களிலேயே வந்துவிட்டிருந்தாலும் சுதந்திரத்துக்குப்பின்னரே அவை வலுவாக வேரூன்றின. எஸ்.ஆர்.டாங்கே, இ.எம்.எஸ்.நம்பூதிரிப்பாடு, கே.தாமோதரன், டி.டி.கோஸாம்பி போன்றவர்கள் பல்வேறு கோணங்களில் மார்க்ஸிய சிந்தனைகளை இந்தியச்சூழலில் விவாதித்து வளர்த்தெடுத்தனர். தொடர்ச்சியாக இதழ்கள் மூலமும் மேடைகள் மூலமும் முன்வைக்கப்பட்ட மார்க்ஸியநோக்கு நம் பொதுச்சிந்தனையை வலுவாக வழிநடத்தியது. ஜெயகாந்தன் வரையிலான நம்முடைய முதன்மை எழுத்தாளர்கள் கணிசமானவர்கள் மார்க்ஸிய நோக்குள்ளவர்கள்.

இக்கருத்தியல்களை ஒட்டி தமிழகத்தில் நவீனசிந்தனைகளை தங்களுக்கு மட்டுமே உரிய நோக்குடன் முன்வைத்தவர்கள் என நான்மூன்று முதற்சிந்தனையாளர்களைச் சுட்டிக்காடுவதுண்டு.பண்டித அயோத்திதாசர், மு.தளையசிங்கம், எஸ்.என்.நாகராசன். இவர்களில் அயோத்திதாசரை மதச்சீர்திருத்த அலையில் சேர்க்கலாம். மு தளையசிங்கம் இந்திய தேசிய எழுச்சியின் அலையைச் சேர்ந்தவர். எஸ்.என்.நாகராசன் மார்க்ஸிய சிந்தனைக்கு நம்முடைய கொடை.

இதெல்லாமே சென்ற இருபதாண்டுகளுக்கு முன்பு வரை இருந்த நிலை. இந்தியஅளவிலும் தமிழ்ச்சூழலிலும் நம் பொதுச்சிந்தனையை உருவாக்கிய அடிப்படைக்கருத்துக்களி முன்வைத்த முதற்சிந்தனையாளர்கள் இருந்தனர். அவர்களை ஒட்டி சிந்தனைகளை தொடர்ச்சியாக முன்வைத்த எழுத்தாளர்களும் பேச்சாளர்களும் இருந்தனர். ஒவ்வொருவராக இன்று முதுமை எய்தி காலத்துக்குள் சென்றுகொண்டிருக்கிறார்கள். எழுத்தாளர்களில் ஜெயகாந்தனையும் சிந்தனையாளர்களில் கோவை ஞானியையும் அக்காலகட்டத்தின் கடைசிக் குரல்கள் என்று சொல்லலாம்

இங்கே எழும் வினா இதுதான்.இன்று அத்தகைய தணியாவிசையுடன் செயல்படும் முதற்சிந்தனையாளர்கள் யார் யார்? நம் பொதுச்சிந்தனை என்ற மையத்தை நோக்கி வந்துசேரும் இந்தியக் குரல்கள் எவை? இ.எம்.எஸ் நம்பூதிரிப்பாடு எழுதிய ஐம்பதாயிரத்துக்கும் மேற்பட்ட பக்கங்களை

தொகுத்து வெளியிட்ட மார்க்ஸிய ஆய்வாளாரான பி.கோவிந்தப்பிள்ளை இதைச் சுட்டிக்காட்டினார். பொதுச்சிந்தனையை நோக்கி வந்துசேரும் விசை கொண்ட பெரும் ஆளுமைகள் இந்தியாவில் இல்லாமலாகிறார்கள் என்றார் அவர்.

ஓர் உவமை சொல்லலாம். முதற் சிந்தனையாளன் என்பவன் பாலையில் பூக்கும் மரம். அவன் காற்றில் வீசும் கோடானுகோடி மகரந்தத்துகளில் மிகச்சிலவே உரிய கருவல்லிகளைக் கண்டுகொள்கின்றன. காயாகிக் கனிகின்றன. அத்தகைய வீச்சுடன் செயல்படாவிட்டால் அவன் அவனைப்போன்ற சிலருக்கு மட்டுமே தெரிந்தவனாக நின்று மறையவே நேரும். அத்தனை மகாந்தங்களையும் உருவாக்கும் விசை அந்த மரத்துக்குள் உறையும் வேட்கைதான். பரவவேண்டும் என்றும் வாழவேண்டும் என்றும் அந்த மரம் கொள்ளும் இச்சை.

இன்றைய சூழலில் இந்தியாவில் எந்த மொழியிலும் அத்தகைய பெரும் வீச்சுடன் எவரும் செயல்படுவதாகத் தெரியவில்லை என்பதே உண்மை. விரிவான ஒரு தேடலில் கடைசியாகச் சொல்லத்தக்கவர் நவகாந்தியச் சிந்தனையாளரான அஷிஷ் நந்தி மட்டுமே. இலங்கைச்சிந்தனையாளரான மறைந்த ரெஜி சிரிவர்த்தனேயையும் ஓர் எல்லைவரைச் சுட்டிக்காட்டலாம். அவர்களும் வரும் எண்பதுகளைச் சேர்ந்தவர்கள். தொண்ணூறுகளுக்குப்பின் என்ன நிகழ்ந்துகொண்டிருக்கிறது?

இன்றைய சிந்தனையாளர்கள் இரு பெரும் பிரிவுகளாக இருக்கிறார்கள். ஒருசாரார் பெரும் ஊடகங்களின் உதவியுடன் பரவலாகத் தெரியவந்தவர்கள். ஆனால் இவர்கள் அசலாக எதையும் சிந்திப்பதில்லை. பெரும்பாலும் பத்தி எழுத்தாளர்கள் அல்லது இதழாளர்கள். சமகால அரசியலையோ சமூகவியலையோ மாறாத சில பொதுமதிப்பீடுகளின் அடிப்படையில் எடைபோட்டு கருத்துரைத்துக்கொண்டே இருப்பார்கள். நம் பொதுச்சிந்தனைக்கு இவர்கள் தொடர்ந்து வந்துசேர்ந்தாலும் பாதிப்பு மிகக்குறைவே. மிகச்சிறந்த உதாரணம் என்றால் ராமச்சந்திர குகாவைச் சொல்லலாம்

இன்னொருசாரார் முழுக்கமுழுக்க கல்வித்துறைக்குள் அல்லது தங்களுக்குரிய அறிவுத்துறைக்குள் மட்டுமே செயல்படக்கூடியவர்கள். இன்னொரு நிபுணரால் மட்டுமே அணுகக்கூடியவர்கள். இன்றைய அறிவுத்துறைகள் மிகமிக நுட்பமானவையாக ஆகிக்கொண்டிருக்கின்றன.

உச்சகட்ட உழைப்புடன் அத்துறைக்குள் தொடர்ந்து செயல்பட்டால் மட்டுமே அங்கே வெற்றிபெறமுடியும் என்ற நிலை உள்ளது. ஆகவே அந்த அறிவுத்துறைக்கு அப்பால் அறியப்படும் அறிஞர்களே குறைவு. பொதுவாக பொதுச்சிந்தனைத்தளத்தில் அதிகம் கவனிக்கப்படும் வரலாற்றாய்வுக்குக் கூட இன்று இதே நிலைதான் உள்ளது. டி.டி.கோசாம்பியின் வரலாற்றாய்வுகள் இந்திய சிந்தனையில் அலைகளைக் கிளப்பி புதிய வாசல்களைத் திறந்த அறுபதுகளுக்குப்பின் இங்கே எந்த வரலாற்றாசிரியரும் அத்தகைய வலுவான பாதிப்பை உருவாக்கவில்லை.

அப்படியென்றால் நம்முடைய இன்றைய பொதுச்சிந்தனையை உருவாக்கும் விசைகள் என்ன? விரிவான ஆராய்ச்சிக்குரிய ஒரு வினா இது. இன்றைய ஊடகங்கள் அனைத்தையும் கருத்தில்கொண்டு யோசிக்கவேண்டிய ஒன்று. எழுத்தாளனாக என்னுடைய பொதுப்பார்வையில் இன்றைய பொதுச்சிந்தனை முந்தைய காலகட்டங்களைப்போல பலவகையான கருத்தியல்களால் தீர்மானிக்கப்படுவதில்லை, அது முழுக்கமுழுக்க தொழில்நுட்பத்தை மட்டும் சார்ந்ததாகவே உள்ளது என்று தோன்றுகிறது.

ஊடகங்களையும் எழுத்துக்களையும் பொதுவாக நோக்கினால் சென்ற பதினைந்தாண்டுகளில் தொழில்நுட்ப விந்தைகள், அது உருவாக்கும் வாய்ப்புகளைப்பற்றிய விவாதங்களே அதிகமும் கண்ணுக்குப் படுகின்றன. தொழில்நுட்பம் உலகை அழுத்தி ஒன்றாக்கிகொண்டிருக்கிறது. இதன் விளைவாக ஒவ்வொருவருக்கும் உலகின் பல பக்கங்கள் அணுகக்கூடியவையாக இருக்கின்றனல். இது அளிக்கும் விந்தையுணர்ச்சியும் மனக்கிளர்ச்சியுமே எங்கும் காணக்கிடைக்கிறது. எந்தச்சிந்தனையும் வலுவான பாதிப்பைச் செலுத்துவதாக பேசப்படவில்லை. எதுவும் நீடித்துப் பேசப்படுவதுமில்லை.

நான் சொல்வது எளிய மனங்களைப்பற்றி அல்ல. சிந்தனைக்கான ஆற்றலும் பழக்கமும் கொண்டவர்களைப் பற்றி. அவர்களேகூட உலகின் புதிய பகுதிகளை அறிந்துகொள்ளும் ஆர்வத்தையே வெளிப்படுத்துகிறார்கள். லிதுவேனிய இசையைப்பற்றியோ, உகாண்டாவின் ஓவியம் பற்றியோ, நிகராகுவாவின் சினிமா பற்றியோ கவனிக்கிறார்கள், பேசுகிறார்கள். அவை பெரும்பாலும் புதிய அறிதல்களே ஒழிய புதிய சிந்தனைகள் அல்ல.

தொண்ணூறுகள் வரைக்கும்கூட வாழ்க்கையை புதிய கோணத்தில் விளங்கிக்கொள்வதற்கும் வகுத்துக்கொள்வதற்கும் செய்யப்பட்ட

முயற்சிகளும் அதன்விளைவான சிந்தனைகளும் இன்று கண்ணுக்குப்படவில்லை. வந்துகுவியும் தகவல்களை ஒருங்கிணைக்கும் பார்வைகள் உருவாகாத காரணத்தால் அவையெல்லாம் உடனுக்குடன் கொப்பளித்து மறைந்துகொண்டே இருக்கின்றன என்று தோன்றுகிறது.

நேற்றைய சூழலை இப்படி விளக்கலாம். நிலத்தாலும் காலத்தாலும் எல்லை வகுக்கப்பட்ட பண்பாடுகளை நோக்கி வெளியே இருந்து சிந்தனைகள் வந்தன. அவை இங்குள்ள சிந்தனையாளர்களை பாதித்தன. அப்பாதிப்புகள் இங்கே உள்ள பொதுச்சிந்தனைத்தளத்துக்கு மெல்லமெல்ல வந்து சேர்ந்து மாற்றங்களை உருவாக்கின. இன்று அந்த எல்லைகள் திறந்துவிடப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு பண்பாடும் நேரடியாக உலகப்பண்பாடுகளுடன் தன்னை கரைத்துக்கொண்டிருக்கிறது. இன்று நம் பொதுச்சிந்தனையைத் தீர்மானிப்பவர்கள் சிந்தனையாளர்கள் அல்ல. உலகளாவிய ஊடகங்கள் மூலம் நம்முடன் வந்து மோதும் பிற சமூகங்களின் பொதுச்சிந்தனைகள்தான்.

இதை ஒரு குறையாக அல்லது சிக்கலாக நான் குறிப்பிட விரும்பவில்லை. இது ஒரு சமகால நிகழ்வு. இதற்கான காரணங்களை பலகோணங்களில் ஆராயலாம். இதன் விளைவுகளையும் கணிக்கலாம். ஆனால் நம் கண்ணெதிரே சிந்தனைகளுக்கான இடத்தை தகவல்புயல் எடுத்துக்கொண்டிருக்கிறது. நம் சமகாலப் பொதுச்சிந்தனையை நோக்கி என்ன சொன்னாலும் தகவல் பெருக்கின் இரைச்சலில் ஒன்றாகவே அதுவும் ஆகிவிடும் நிலை உருவாகிவிட்டிருக்கிறது.

இன்று ஒரு முதற்சிந்தனையாளன் தன் விரிவான சிந்தனைகளை தொடர்ந்து முன்வைத்தால் அது சென்றகாலம் போல தொடர்ந்து விவாதிக்கப்பட்டு மெல்லமெல்ல சுருக்கப்பட்டு அடுத்தடுத்த தளங்களுக்கு நகர்ந்து பொதுச்சிந்தனையை தீர்மானிக்கும் ஆற்றல்புள்ளிகளாக ஆவதில்லை. அந்த மகரந்தங்கள் புயலால் அள்ளி முடிவற்ற வானில் வீசப்பட்டுவிடும்.

# (6) நீர்க்குமிழிகளின் வெளி

முன்பு விகடன் கேள்விபதில் ஒன்றில் இதழாளரான மதனிடம் ஒருவர் 'வாசிப்பது, தொலைக்காட்சி பார்ப்பது இரண்டுக்கும் இடையே என்ன வேறுபாடு?' என்று கேட்டார். மதன் 'நிறைய தொலைக்காட்சி பார்த்து அறிவாளியாக ஆன எவரையாவது பார்த்திருக்கிறீர்களா?' என்று பதில் சொன்னார்.

நேரடியான பதில். ஆனால் தொடர்ந்து சிந்திக்க வைப்பது. தொலைக்காட்சியும் ஓர் ஊடகம்தானே? நம்மவர் ஒருநாளில் ஐந்துமணிநேரத்தை சராசரியாக அதற்கு செலவிடுகிறார்கள். அவர்கள் எவரும் எளிய அளவில்கூட அறிவையோ சிந்தனைத்திறனையோ அடைந்ததாகத் தெரியவில்லை. ஆனால் ஒருநாளில் அரை மணிநேரம் வாசிக்கும் ஒருவர் ஒருவருடத்தில் சிந்தனைத்திறனிலும் மொழியிலும் தகவலறிவிலும் மேம்பட்டவராக ஆவதைக் காணலாம். என்னதான் வேறுபாடு?

நவீன யுகத்தின் அடையாளம் என்பது என்ன என்ற வினாவுக்கு பேரளவிலான உற்பத்தி, நுகர்வுவெறி, தொழில்நுட்பப் பாய்ச்சல், அனைவருக்குமான கல்வி என பலவற்றைச் சொல்வார்கள். முதன்மையானதாக நான் நினைப்பது நவீன யுகம் செய்தித்தொடர்பியலின் விளைவு என்பதைத்தான். செய்தித்தொடர்பை நிகழ்த்தும் ஊடகங்களே இன்று பொதுச்சிந்தனையை உருவாக்குபவை. பொதுச்சிந்தனையில் இருந்தே ஒரு சமூகத்தின் அரசியலதிகாரம் உருவாகிறது. சமூக அமைப்புகளும் தனிநபர் உறவுகளும் உருவாகின்றன. வரலாற்றுணர்வு உருவாகிறது. ஆகவே இன்றைய சூழலில் ஊடகங்கள் வகிக்கும் பங்களிப்பு முதன்மையானது. அதாவது ஊடகங்களே இன்று சமூக உருவாக்கத்தை நிகழ்த்திக்கொண்டிருக்கின்றன.

ஊடகங்களின் வல்லமையை மிகநுட்பமாகப் புரிந்துகொண்டு தன் அரசியல்பணிக்குப் பயன்படுத்திக்கொண்ட சிந்தனையாளர் காந்தி. காந்தியின் எழுத்துக்களில் கால்வாசி அவர் இதழ்களுக்கு எழுதிய வாசகர்கடிதங்கள் என்பதில் அவரது அணுகுமுறை தெரிகிறது. ஊடகங்களைக் கைப்பற்றுவதே அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கான

முதல்படி என்று வாதிட்டவர் இத்தாலிய மார்க்ஸியரான அண்டோனியோ கிராம்ஷி. இன்றைய ஊடகவியல்சிந்தனைகளுக்கு அவரையே பிதா என்று சொல்லவேண்டும். இன்று ஊடகங்களை மதிப்பிட்டு ஆராயும் அறிவுத்துறைகளும் கொள்கைகளும் பெருகியிருக்கின்றன.

இந்தியாவின் ஊடகவரலாற்றிலேயே எளிமையான பதில் இதற்கு கிடைக்கிறது என்று நினைக்கிறேன். அச்சு ஊடகம் 1780-களில் தோன்றியபின் இந்தியாவில் ஆங்கிலத்தில் அச்சு வடிவ செய்தி இதழ்கள் வரத்தொடங்கின. நூறாண்டுகாலம் அவை பெரும்பாலும் ஆங்கிலேயரின் குரல்களாகவே இருந்தன. 1850-களில்தான் இந்தியாவுக்குரிய தேசிய செய்தித்தாள்கள் வெளிவரத்தொடங்கின. அதை இந்திய செய்தி ஊடக யுகத்தின் தொடக்கம் எனலாம். 1923 வாக்கில் காந்தி ஒத்துழையாமை இயக்கத்தை திரும்பப்பெற்றபோது உருவான சோர்வுக்காலகட்டத்தில் ஏராளமான தேசியவாதிகள் ஊடகத்துறைக்குள் நுழைந்தனர். இந்தியச் செய்தி ஊடகத்துறையில் ஒரு பெரிய மறுமலர்ச்சியை அது உருவாக்கியது. இந்திய மொழிகளில் நவீன இலக்கியம் ஓர் இயக்கமாக வளர ஆரம்பித்தது. அடுத்த காலகட்டம் இந்திய சுதந்திரத்துக்குப் பின்னர் 1950-களில். வணிகமாகவும் பெருந்தொழிலாகவும் ஊடகத்துறை மலர்ச்சி அடைந்தது அப்போதுதான்.

தமிழ் மலையாளம் ஆங்கிலம் ஆகிய மூன்றுமொழிகளிலும் இந்த நான்கு கட்டங்களிலும் ஊடகங்களின் பங்களிப்பை நான் ஓரளவு கவனித்திருக்கிறேன். அது சில மனப்பதிவுகளை அளிக்கிறது. முதற்காலகட்டத்தில் அச்சு ஊடகம் இந்தியாவின் பிரிட்டிஷாருக்கு பிரிட்டனின் நினைவை நீட்டிப்பதற்கும் இங்குள்ள அதிகார அரசியலை விவாதிப்பதற்குமான களமாகவே இருந்தது. அன்று அனைவருக்கும் உரிய பொதுக்கல்வி முந்தைய நிலப்பிரபுத்துவ சமூகத்தில் இருக்கவில்லை. படிப்படியாக பிரிட்டிஷார் உருவாக்கிய முதலாளித்துவம் அக்கல்வியை அறிமுகப்படுத்தியது. அப்படி ஒருசமூகம் இங்கே உருவானபின்னர்தான் இரண்டாவது ஊடகக்காலகட்டம் தொடங்குகிறது. தொடக்கத்தில் அந்த அச்சு ஊடகங்கள் உயர்கல்விகற்றவர்களை மட்டுமே சென்றடைவதாக இருந்தாலும் அவை தொடர்ச்சியான பாதிப்பை உருவாக்கி மெதுவாக தங்களுக்குரிய வாசக சமூகத்தை உருவாக்கிக் கொண்டன.

மூன்றாவது காலகட்டம் தேசிய எழுச்சி தேசத்தையே ஒருங்கிணைத்துவிட்ட பின்பு உருவானது. வட்டாரமொழியின் செய்தி ஊடகங்களை மக்கள் கூட்டம்கூட்டமாக நின்று வாசித்துக்கேட்டார்கள். நாகர்கோயிலில் செய்தித்தாள்களை வாசித்துக்காட்டும் மையங்கள் பல அக்காலத்தில் இருந்தன. எழுத்தறிவற்ற நூற்றுக்கணக்கானவர்கள் கூடி செய்திகளைக் கேட்டுச்சென்றனர். ஒரு செய்தி இதழுடன் ஒரு கிராமத்தில் நுழைந்தால்போதும் மக்கள் கூடிவிடுவார்கள், அங்கே அரசியல்பிரச்சாரம் செய்ய ஆரம்பித்துவிடலாம் என தொடக்ககால தேசிய இயக்கவாதிகள் பலர் சுயசரிதைகளில் குறிப்பிட்டிருக்கிறார்கள். அக்காலகட்டத்தில் கிராமங்கள்தோறும் நாளிதழ்களை வாசிப்பதற்கான வாசகசாலைகள் அமைப்பதையே முதன்மையான அரசியல்நடவடிக்கையாக காங்கிரஸும் கம்யூனிஸ்டுகளும் கொண்டிருந்தன.

நான்காவது காலகட்டத்தில் தேசம் முழுக்க கல்விபெற்றவர்களின் எண்ணிக்கை கணிசமாகப் பெருகிவிட்டிருந்தது. இதழ்களை பணம்கொடுத்து வாங்கும் நடுத்தரவர்க்கம் பிறந்துவிட்டிருந்தது அந்நிலை வந்ததுமே ஊடகத்தை ஒரு பெருந்தொழிலாக லாபநோக்கில் நடத்தும் நிறுவனங்கள் வேரூன்றின. ஏற்கனவே இலட்சியநோக்குடன் தொடங்கப்பட்ட ஊடகங்கள் வணிகநிறுவனங்களாக ஆயின. புதிய வணிகப்பிரசுரங்கள் பிறந்தன. இக்காலகட்டத்தில்தான் ஊடகங்களுக்கு நுகர்வோர் என்னும் ஒரு தரப்பு உருவாகியது. வணிகத்தில் போட்டி பிறந்தது. தொழில்நிறுவனங்கள் அளிக்கும் விளம்பர வருவாய் ஊடகங்களின் போக்குகளைத் தீர்மானிக்கும் விசையாக ஆகியது. விளைவாக நுகர்வோரைக் கவரும்படியாக இதழ்கள் மாற்றம்கொள்ளத்தொடங்கின. நுகர்வோரின் தேவை ஊடகங்களை வடிவமைக்கத் தொடங்கியது.

இந்த மாற்றத்தை நாம் மிகத்தெளிவாகவே இந்திய சுதந்திரத்துக்கு முன்னும் பின்னும் உள்ள இதழ்களில் காணலாம். அல்லது ஆனந்தவிகடன் போன்ற ஒரு நெடுநாள் பாரம்பரியம் கொண்ட இதழில் இவ்விரு காலகட்டங்களிலும் வந்த மாறுதல்களை கவனிப்பது மிக ஆர்வமூட்டுவது. முந்தைய இதழ்கள் ஒரு இலட்சியவாதத் தன்மை கொண்டிருந்தன. அவை வாசகனை நோக்கிப் பேசின. அவற்றை மேடையில் இருந்து மக்களை நோக்கிப் பேசும் அரசியல்செயல்பாட்டாளனுடன் ஒப்பிடலாம். அவன் அவர்களை தன்னை

நோக்கி இழுக்க முயல்கிறான். தன்னை அவர்கள் கவனிக்கும்பொருட்டு அவர்களை மகிழ்விக்க அவன் சிலவற்றைச் செய்யலாம். ஆனால் அவன் நோக்கம் தன் தரப்பை முன்வைப்பதே. ஐம்பதுகளுக்குப் பின்னால் வந்த இதழ்கள் மேடையில் நின்று கேளிக்கை நடத்தும் கலைஞனைப்போன்றவை. அவற்றுக்கு சொல்வதற்கு ஏதுமில்லை. ரசிகர்களின் ரசனைக்கேற்ப தங்களை மாற்றிக்கொண்டு அவர்களை முடிந்தவரை மகிழ்வித்து லாபம் கொள்ள அவை முயல்கின்றன.

இந்திய ஊடகங்கள் இந்நான்கு கட்டத்திலும் பொதுச்சிந்தனையைக் கட்டமைப்பதில் எந்த அளவுக்குப் பங்களிப்பாற்றின? முதற்கட்டத்தில் அவை பெரும்பாலும் பிரிட்டிஷாரை நோக்கியே பேசின. அவற்றின் பேசுபொருள் அரசுநிர்வாகம் சார்ந்ததாகவே இருந்தது. ஆனால் தொடர்ச்சியாக அவை பேசி முன்னிறுத்திய ஒன்று பொதுநீதி என்ற கருத்து என்பதை கவனித்திருக்கிறேன். இந்தியச்சூழலில் மட்டுமல்ல பொதுவாக உலகம் முழுக்கவேகூட அனைவருக்கும் சமமான பொதுநீதி என்ற கருத்து அன்று இருக்கவில்லை. அது ஓர் ஐரோப்பியக் கருத்து அன்று. அதை தொடர்விவாதம்மூலம் நிலைநிறுத்தியவை அக்கால அச்சு ஊடகங்கள்.

இரண்டாம்கட்டத்தில்தான் இந்திய ஊடகங்கள் இன்றைய ஜனநாயக இந்தியாவை கட்டியமைத்திருக்கும் அடிப்படைச் சிந்தனைகள் அனைத்தையும் இங்கே அறிமுகம் செய்து விவாதங்கள் மூலம் நிலைநாட்டின என்று சொல்லலாம். அவற்றை மிகப்பொதுவாக இப்படி தொகுத்துக்கொள்ளலாம். அனைவருக்குமான சட்டம், அனைவருக்கும் பொதுக்கல்வி, தனிமனித உரிமைகள், சிந்தனைச் சுதந்திரம், பாலியல் சமத்துவம், ஜனநாயக அரசியல். அந்தத் தொடக்கத்தை மிக விரிவாக முன்னெடுத்து ஓர் அலையை உருவாக்கியது மூன்றாவது காலகட்டம். மூன்றாவது காலகட்டம் பெரும்பாலும் இந்திய வட்டாரமொழிகளில் ஊடகங்களின் பெருவளர்ச்சியை நிகழ்த்தியது. குறைவான கல்வியறிவுள்ள பெருந்திரள் மக்களைச் சென்று சேர்ந்தது. ஆகவே அதன் பங்களிப்பும் மிக அதிகம்.

இந்தியாவின் கோடிக்கணக்கான மக்களின் ஒட்டுமொத்த வாழ்க்கையையே மாற்றியமைத்த அடிப்படைக் கருத்துக்கள் வெறும் ஐம்பதாண்டுகாலத்தில் எப்படி பரவின என்று பார்த்தால் வியப்பே எஞ்சுகிறது. 1880 முதல் நம் அச்சு

ஊடகங்கள் வெளியிட்ட புகழ்மிக்க எழுத்துக்கள் இருபதாம் நூற்றாண்டின் சிந்தனையாளர்களை உதிரிமேற்கோள்களாகவே அறிமுகம் செய்திருக்கின்றன என்பதை கவனிக்கலாம். அதிலும் மிக முக்கியமானவர்கள் மட்டுமே இங்கு வந்துசேர்ந்திருக்கிறார்கள். சாக்ரடீஸ், பிளேட்டோ, அரிஸ்டாடில் போன்ற தொன்மையான சிந்தனையாளர்கள், வால்ட்டேர், ரூசோ, எமர்சன், தோரோ, ரஸ்கின், ஜெ.எஸ்.மில், இங்கர்சால், ஃபாயர்பாக் போன்ற சமகாலச் சிந்தனையாளர்கள்; கதே, தல்ஸ்தோய், ஷெல்லி, விக்டர் ஹ்யூகோ, சார்ல்ஸ் டிக்கன்ஸ், கூல்ரிட்ஜ் போன்ற இலக்கியவாதிகள், மாஜினி போன்றவர்கள் இங்கே பேசப்பட்டிருக்கிறார்கள். இவற்றில் சிறிய வட்டார மாறுதல்கள் உண்டு. உதாரணமாக, கேரளத்தில் விக்டர் ஹ்யூகோவுக்கு இருக்கும் முக்கியத்துவம் தமிழகத்தில் இல்லை. மற்றபடி ஒரே வகையாகவே இந்த கருத்தாடல் நிகழ்ந்திருக்கிறது.

இன்று பார்க்கையில் இச்சிந்தனையாளர்கள் எவரும் ‘முறையாக’ அறிமுகம் செய்யப்பட்டதில்லை என்று தெரிகிறது. இவர்களின் முழுநூல்களும் பெரும்பாலும் எம்மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டதில்லை. பிளேட்டோவின் குடியரசு போன்றவை தமிழிலும் மலையாளத்திலும் மொழியாக்கம் செய்யப்பட்டிருந்தாலும் பரவலாக வாசிக்கப்படவில்லை. மாறாக சமூகப்பிரச்சினைகளை விவாதிக்கும்போது மேற்கூறப்பட்ட சிந்தனையாளர்களின் பார்வைகள் கருவிகளாகப் பயன்படுத்தப்பட்டன. அவையே இந்தியசிந்தனையில் பெரிய மாறுதல்களை உருவாக்கின. இக்காலகட்டத்தில் தமிழில் புதியசிந்தனைகளை தொடர்ந்து அறிமுகம் செய்த பெ.நா.அப்புஸ்வாமி, ப.ராமஸ்வாமி, சுவாமிநாதசர்மா, ஏ.கே.செட்டியார் போன்ற பலரை நாம் இன்று நினைவுகூரலாம்.

நான்காம் காலகட்டத்தில் ஊடகதளத்தில் இலட்சியவாத அலை ஓய்ந்து வணிகஅலை எழுந்தபோது இந்தியாவெங்கும் ஊடகம் இரண்டாகப்பிரிந்தது. பரவலான மக்களைச் சென்றடைந்த வணிக-கேளிக்கை இதழ்கள் ஒரு பக்கம். மறுபக்கம் அறிவியக்கத்துக்காக தகுதிகொண்ட குறைந்த அளவிலான வாசகர்களைச் சென்றடையும் சிற்றிதழ்கள் இன்னொரு பக்கம். ஐம்பதுகள் முதல் இந்தியமொழிகளில் புதியசிந்தனைகளை சிற்றிதழ்களே முன்வைத்தன. அவை ஓரளவு அவற்றைப் பற்றிப்பேசி அவற்றுக்குரிய மொழியையும் சொல்லாட்சிகளையும் உருவாக்கியபின்னர் அவை எளிய வடிவில் வணிக ஊடகங்களில் இடம்பிடித்தன.

இந்திய சிற்றிதழ்த்தளம் இருவகை சிந்தனைப் போக்குகள் கொண்டதாக இருந்தது. ஒன்று, மார்க்ஸியச் சிந்தனை. இன்னொன்று நவீனத்துவ [modernism] சிந்தனை. முப்பதுகளிலேயே இந்தியாவில் மார்க்ஸியம் பேசப்பட்டாலும் மார்க்ஸியக் கொள்கைகள் விவாதிக்கப்பட்டது சிற்றிதழ்களில்தான். எழுபதுகளில் இந்தியாவில் மார்க்ஸியச்சிந்தனைகளை பேசும் சிற்றிதழ்களின் எண்ணிக்கை உச்சத்தை அடைந்தது. மார்க்ஸ், எங்கெல்ஸ், லெனின், மாவோ போன்ற செவ்வியல் மார்க்ஸியர்களும் அண்டோனியோ கிராம்ஷி, போன்ற நவமார்க்ஸியர்களும் ராகுல சாங்கிருத்தியாயன், டி.டி.கோஸாம்பி, ஈ.எம்.எஸ் போன்ற இந்திய மார்க்ஸியர்களும் இங்கு விவாதிக்கப்பட்டனர்.

இன்னொருபக்கம் மார்க்ஸியத்தை ஐயப்படவோ மறுக்கவோ செய்த நவீனத்துவச் சிந்தனைகள் ஐரோப்பாவில் இருந்து வந்தன. இந்தியாவைப்பொறுத்தவரை நவீனத்துவ சிந்தனையை தொடங்கிவைத்த முன்னோடிச்சிந்தனையாளர் சிக்மண்ட் ஃப்ராய்ட்தான். நவீனத்துவ இலக்கிய அழகியலை உருவாக்கியவர் எஸ்ரா பவுண்ட். அதன்பின்னரே ரஸ்ஸல், சார்த்ர், சிமோங் த பூவா, மார்ட்டின் ஹைடெக்கர் போன்ற நவீனத்துவச் சிந்தனையாளர்களும், காஃப்கா காம்யூ போன்ற இருத்தலியல் எழுத்தாளர்களும் இங்கே பேசப்பட்டனர்.

இந்தச் சிந்தனைகளும் இங்கே மேற்கோள்கள் மூலமே அறிமுகமாயின என்பதை கவனிக்கலாம். இருபத்தைந்தாண்டுகாலம் பேசப்பட்ட சார்த்ரின் 'இருத்தலும் இன்மையும்' [Being and Nothingness] என்னும் முதன்மை ஆக்கம் இன்னும்கூட தமிழிலோ மலையாளத்திலோ கிடைப்பதில்லை. ஃப்ராய்டின் எந்த நூலும் இருமொழிகளிலும் மொழியாக்கம் செய்யப்படவில்லை. மார்க்சிய மூலநூல்களைப்பொறுத்தவரை மூலதனம் மிகத்தாமதமாக, கிட்டத்தட்ட மார்க்சிய அலையே ஓய்ந்தபின்னர்தான் தமிழுக்கும் மலையாளத்துக்கும் வந்து சேர்ந்தது. மார்க்சியத்தின் மூலதத்துவமாக அமையும் ஹெகல் அல்லது ஃபாயர்பாக்கின் எந்நூலும் தமிழில் கிடைக்கவில்லை.

அதாவது சிந்தனைகள் இங்கே வந்ததற்கு ஒரு முறைமை இருக்கிறது. மேலைநாட்டுச் சிந்தனையாளர்களை இங்கே அறிமுகம் செய்வதென்றால அச்சிந்தனைகள் அங்கே பேசப்பட்ட ஒட்டுமொத்தச் சூழலையும், அவை நிகழ்ந்த அறிவுத்தளத்தின் பிறகுரல்களையும் இங்கே

கொண்டுவரவேண்டும். அது இங்கே பெரும்பாலும் நிகழவில்லை. மாறாக நாம் இங்கே விவாதிக்கும் ஒரு சமூகவியல், அரசியல், பண்பாட்டுச் சிக்கலைப் புரிந்துகொள்ள மேலைநாட்டுச் சிந்தனையின் கருவிகள் கையாளப்பட்டன. அதன்மூலம் அச்சிந்தனைகள் இங்கே அறிமுகமாயின. அவ்வறிமுகம் பெரும்பாலும் மேற்கோள்களே. ஆனாலும் அவை இங்கே மேலதிக சிந்தனைகளை உருவாக்கின. நம் சூழலுக்கே உரிய விடைகளையும் கொண்டுவந்தன.

இந்தமுறைமை காரணமாக நம்முடைய சிந்தனையைத் தீர்மானிப்பதில் நூல்களை விட இதழ்களுக்கே அதிக முக்கியத்துவம் இருந்து வருகிறது. இந்தியாவில் எந்த ஒரு சிந்தனையாளனையாவது நூல் வடிவில் முழுமையாக அறிந்த வாசகர்கள் எத்தனைபேர் இருப்பார்கள்? ஆனால் ஓரளவு வாசிக்கக்கூடியவர்களுக்கு இதழ்கள் வழியாக சென்றகாலகட்டத்தின் முக்கியமான சிந்தனையாளர்களின் சிந்தனைகள் அறிமுகமாகியிருந்தன. அவர்களின் சிந்தனைகளை அவை பாதித்தன. முப்பதுகளில் வால்டேரும், ஐம்பதுகளில் ரஸ்ஸலும், எழுபதுகளில் மார்க்ஸும், எண்பதுகளில் சார்த்ரும் இப்படித்தான் நம்மை வந்தடைந்தனர். இது போதுமானதா என்ற வினா வேறு. ஆனால் இப்படித்தான் நிகழ்ந்தது. ஆகவே தொண்ணூறுகள் வரைக்கும்கூட பிரபல வணிகக் கேளிக்கை இதழ்களை வாசிக்கும் வாசகர்கூட சிலவருடங்களில் உலகசிந்தனையைப்பற்றிய ஒரு மெல்லிய அறிமுகத்தை அடைய வாய்ப்பிருந்தது.

ஐம்பதுகளில் தமிழகத்தின் வலுவான ஊடகமாக சினிமா மாறியது. முதன்மையாக கேளிக்கை இயல்பு கொண்டிருந்த சினிமா அச்சு ஊடகத்தை தன்னை நோக்கித் திருப்பியது. ஆனந்தவிகடனின் இதழ்க்ளை 1930 முதல் தொடர்ந்து பார்ப்பவர்கள் அது மெல்லமெல்ல சினிமாவை நோக்கித் திரும்பியபடியே இருப்பதைக் காணலாம். இன்று அது கிட்டத்தட்ட ஒரு சினிமாப்பத்திரிகை மட்டுமே. ஒருகாலத்தில் அதில் உ.வே.சாமிநாதய்யர் எழுதியிருக்கிறார் என்றால் இன்றைய வாசகர்கள் அதிர்ச்சி அடையக்கூடும். குமுதம் தொடங்கியதுமுதலே சினிமாவை அண்டி இயங்கிய இதழ். வணிகநோக்கம் கொண்ட அச்சு ஊடகங்கள் மேலும் வணிகநோக்கு கொண்ட காட்சி ஊடகத்தை தங்கள் முன்னுதாரணமாகக் கொண்டன என்று இதைச் சொல்லலாம்.

தொண்ணூறுகளில் தொலைக்காட்சி வந்தது. அச்சு ஊடகத்தின் செல்வாக்கில் அது பெரிய அடியை வீழ்த்தியது. தொலைக்காட்சி முழுக்கமுழுக்க கேளிக்கை ஊடகம். கேளிக்கை அல்லாத எதுவும் அதில் கவனிப்பையே பெறுவதில்லை. அதன் விரிவான செய்திவிவாதங்களால் கூட மேலோட்டமான உத்வேகத்துக்கு அப்பால் எந்த வகையான அறிவளிப்பையும் அதன் பார்வையாளனுக்கு செய்ய முடிவதில்லை. ஒவ்வொரு நாளும் தொலைக்காட்சியின் செய்திவிவாதங்களைப் பார்க்கும் எவரையேனும் மாதிரிக்காக சோதித்துப்பார்க்கலாம். செய்திகளைப்பற்றியேகூட ஓர் எளிய புரிதல் அவரிடமிருப்பதில்லை என்பதுதான் தெரியவரும். அதைத்தான் மதன் அவரது பதிலில் சுட்டிக்காட்டியிருந்தார்.

கேளிக்கை வணிகம் நோக்கிய நகர்வு காரணமாக அச்சு ஊடகம் ஐம்பதுகள் முதல் படிப்படியாக தன் அறிவியக்கத் தொடர்புகளை வெட்டிக்கொண்டே இருக்கிறது. முப்பதுகளில் அது அறிவியக்கத்தின் ஒரு பகுதியாக இருந்தது. ஐம்பதுகளுக்குப்பின் அறிவியக்கத்தின் சில துணுக்குகளை எடுத்து பொதுச்சிந்தனைத் தளத்துக்குக் கொண்டு செல்லும் பணியைச் செய்தது. இன்று ஓரளவேனும் எஞ்சியிருக்கும் அறிவியக்கத் தொடர்புகளைக் கூட களைந்துகொண்டு வெறும் கேளிக்கைமேடைகளாக தங்களை ஆக்கிக் கொண்டுள்ளது. மதன் சொன்னதை இப்படி நீட்டிக்கொள்ளலாம். இன்று ஒருவர் நாளில் ஐந்துமணிநேரம் இன்றைய அச்சு ஊடகங்களை வாசித்தாலும் எந்த அறிவுத்தள முன்னகர்வும் அற்றவராகவே இருப்பார்.

அடுத்தகட்டமாக இணையம் வழியாக சமூகவலைத்தளங்கள் என்னும் ஊடகம் வல்லமைபெற்றுள்ளது. அச்சு ஊடகங்கள் அதை நோக்கி திரும்பிக்கொண்டிருக்கின்றன. சமூகவலைத்தளங்கள் எந்தவகையான அறிவுப்பரிமாற்றத்துக்கும் ஆற்றலற்றவை, வெறும் சொற்குவியல்களாக நிகழும் அரட்டைகளுக்கு அப்பால் அவற்றை கொண்டுசெல்லமுடியாதென்பது மேலும் மேலும் நிரூபணமாகியபடியே உள்ளது. அனைத்துக்கருத்துக்களையும் உள்ளிழுத்து வெட்டி அரட்டையாக பொருளிழக்கச்செய்து கரைத்துக்கொள்ளும் கடல் அது. இன்றைய முதன்மையான ஊடகமாக சமூவலைத்தளங்கள் மாறும்போது அச்சு ஊடகங்கள் அவற்றின் நீட்சிகளாக தங்களை உருமாற்றிக்கொண்டிருக்கின்றன.

விளைவாக சென்ற நூறாண்டுகளுக்கும் மேலாக சமூகத்துடன் உரையாட அறிவியக்கங்களுக்கு இருந்த ஊடகப்பரப்பு முழுமையாகவே இல்லாமலாகிக்கொண்டிருக்கிறது. அறிவியக்கத்தில் இருந்து சிந்தனைகள் எளிமைப்படுத்தப்பட்டு மக்களின் பொதுச்சிந்தனைத்தளத்துக்கு கொண்டு செல்லப்படுவதேயில்லை. சிந்தனையாளர்கள் அனைவருமே இந்தப்பெருங்கடலுக்குள் மூழ்கவைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் என்ன பேசினாலும் அவையெல்லாம் கொப்புளங்களாகவும் குமிழிகளாகவும் மாறி மேலே நீர்ப்பரப்பில் சென்று வெடித்து மறைகின்றன.

# (7) பகற்கனவின் பாதையில்

கு.ப.ராஜகோபாலனின் ஒரு பழைய கதையில் [கனகாம்பரம்- தொகுப்பு] ஒருவன் கும்பகோணத்தில் தன் நண்பனை தேடிச்செல்கிறான். நண்பனுக்கு அப்போதுதான் திருமணமாகியிருக்கிறது. இவன் அங்கே செல்லும்போது நண்பன் இல்லை. அவனுடைய இளம் மனைவி மட்டும் தனியாக இருக்கிறாள். பெரிய அழகி அவள். அவள் இவனை வரவேற்று காபி போட்டுக் கொடுக்கிறாள். கணவன் நாளைதான் வருவான் என்கிறாள். இவனுக்கு கும்பகோணத்தில் செல்வதற்கு ஓர் இடமில்லை. என்னசெய்வதென்று தெரியாமல் இருக்கையில் அவளே மாடியில் தங்கிக்கொள்ளலாம் என்று சொல்கிறாள். அவள் சமைத்துப்போட்டதைச் சாப்பிட்டுவிட்டு இவன் மாடியில் ஜமுக்காளத்தைப்போட்டு படுத்துக்கொள்கிறான். அவள் இவனுக்கு குடிக்க தண்ணீருடன் மாடி ஏறி வருகிறாள். இவனருகே சப்பணமிட்டு அமர்ந்து கருங்கூந்தலை மார்மேல் தூக்கிப்போட்டுக்கொண்டு அமர்ந்து பேசிக்கொண்டிருக்கிறாள்....

நல்லவேளையாக இந்தக்கதையை நான் வாசிக்கும்போது தல்ஸ்தோயின் நாவல்களை வாசித்திருந்தேன். கு.ப.ராஜகோபாலனிடம் மனசுக்குள் 'வே, என்னவே இது?' என்று கேட்டுக்கொண்டேன். கும்பகோணத்தில் 1940 வாக்கில் நடக்கும் கதை. என்ன யதார்த்தம் இது? யாருக்காக அவர் இதை எழுதினார்? இன்று ஒரு நுண்ணுணர்வுள்ள இலக்கியவாசகன் கு.ப.ராஜகோபாலனின் கதைகளின் முழுத்தொகுப்பை வாசிக்கநேர்ந்தால் ஐந்தாறு சிறுகதைகளை நல்லகதைகள் என்பான். இன்னும் சிலகதைகளை பரவாயில்லை என்பான். மிச்சகதைகள் ஏன் இலக்கியம் என்று சொல்லப்படுகின்றன, ஏன் கு.ப.ராஜகோபாலன் ஓர் இலக்கிய முன்னோடியாக கருதப்படுகிறார் என்று திகைப்பான். முக்கால்வாசிக்கதைகள் 'அவன் மார்பில் அவள் சாய்ந்தாள்' என முடியும் படைப்புகள். கு.ப.ராஜகோபாலனின் அந்தரங்கப்பகற்கனவில் ஊறி மிதந்துகிடக்கக்கூடியவை.

அன்று கு.ப.ராஜகோபாலன் பெரிதும் ரசிக்கப்பட்டமைக்கு இந்தவகையான கதைகளே காரணம். உண்மையான அனல் வீசிய பண்ணைச்செங்கான் போன்ற கதைகள் அல்ல. முக்கால்நூற்றாண்டு தாண்டி இன்று

வாசிக்கையில் அவற்றை எழுதி வாசித்த சமூகப்பிரக்ஞையை நுணுக்கமாக ஆராய்வதற்கான மூலப்பொருட்கள் என்றவகையிலேயே இக்கதைகள் கவனத்துக்குரியவை என்று படுகிறது. ஆணும் பெண்ணும் ஓரக்கண்ணால் பார்த்துக்கொண்டாலே ஊரலர் எழும் சூழல். மிகமிக இளமையிலேயே வீட்டுக்காரர்கள் பார்த்து ஏற்பாடு செய்துவைக்கும் திருமணம். அந்த மனைவியுடன் தனியாக அமர்ந்து ஒருமணிநேரம் பேசுவதுகூட ஆபாசம் என வகுத்திருக்கும் குடும்ப மனச்சூழல். இளமையிலேயே தொடர்ந்து பிறக்கும், தொடர்ந்து இறக்கும் குழந்தைகள். பலவகையான நோய்கள். காதலே இல்லாத ஒரு சமூகம் கு.ப.ராஜகோபாலன் வாழ்ந்தது. மிருகங்களுக்குக் கூட இருக்கும் சல்லாபம் முழுக்க மறுக்கப்பட்ட காலம்.

அந்தச் சமூகத்தின் அந்தரங்கமான பகற்கனவென்பது அழகிய இளம்பெண்ணுடன் சல்லாபம் செய்தல்தான். காமம் கூட இல்லை, சல்லாபம் மட்டுமே. 1942-இல் எழுதப்பட்டு பலவருடங்களுக்குப் பின்னர் மறுபதிப்பாகியிருக்கும் க.நா.சு.வின் ‘சர்மாவின் உயில் ’ என்ற நாவல் இந்த மனநிலையை இன்னும் விரிவாக காட்டக்கூடியது. அன்றைய குடும்பச்சூழலை, ஏற்பாட்டுத்திருமணம் அளிக்கும் காதலற்ற குடும்ப வாழ்க்கையை, அதனுள் நிரந்தர பகற்கனவாக இருந்துகொண்டிருக்கும் காதலுக்கான தாகத்தை அதில் காணலாம்.

நவீனத் தமிழிலக்கியத்தின் அடித்தளம் என்று சொல்லத்தக்க மணிக்கொடி காலகட்டத்தை இன்று பார்க்கையில் அகவாழ்க்கைக்கான இந்த ஏக்கமே அதன் மைய ஓட்டமாக இருந்திருப்பதைக் காணமுடிகிறது. கு.ப.ராஜகோபாலன், மௌனி, ந.சிதம்பரசுப்ரமணியம், க.நா.சுப்ரமணியம் என்று அனைவருமே இதைத்தான் முக்கியமாக எழுதியிருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. உலகமெங்கும் உருவாகி வந்த புத்திலக்கியம் என்பது ஜனநாயக அரசியல்பிரக்ஞையையும், நவீன ஆன்மீகத்தேடலையும் சாரமாகக் கொண்டது. புத்துலகம் என்று அவை நினைத்த வரும்காலத்தின் அறவியலையும் அழகியலையும் தீர்மானிக்கும் அடித்தளங்கள் அவை. அந்தத் தேடலின் அலைக்கழிப்புகளையும் கொந்தளிப்புகளையும் வெளிப்படுத்தியவை. அந்தத் தளத்தில் செயல்பட்ட, அதனாலேயே இன்றும் முன்மாதிரியாக நிற்கக்கூடிய தனிக்கலைஞன் புதுமைப்பித்தன் மட்டுமே.

மற்றவர்களுக்கு என்ன ஆயிற்று? ஏன் மீண்டும் மீண்டும் அவர்கள் காதோரம் முடி இறங்கிய வட்டமுகமும் காந்தக்கண்களும் கொண்ட

கட்டழகிகளைப்பற்றியே எழுதினார்கள்? ஏன் மனிதவாழ்க்கையின் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் நிகழும் ஒரு குறிப்பிட்ட உணர்ச்சி மட்டும் அவர்களுக்கு மொத்த வாழ்க்கையாகத் தெரிந்தது? இந்திய மெய்ஞான மரபில் காதல் என்பது ஒரு பெரும் குறியீடு. பிரேமை என்பது கடவுளையும் இயற்கையையும் அறிவதற்கான ஒரு அழகிய வழி. ஆனால் இவர்களின் எழுத்தில் அந்த அம்சமே இல்லை. இது உள்ளூர எரியும் ஒரு தசைப்பரப்பில் தன் கற்பனையின் குளிர்ந்த தைலத்தை அள்ளி அள்ளிப்பூசிக்கொள்வது மட்டுமே.

மணிக்கொடி உருவாக்கிய இந்த முன்மாதிரி அன்று உருவாகிவந்த வணிக இலக்கியத்தில் அலைகளைக் கிளப்பியது. தமிழகத்தின் இந்த அந்தரங்கத்தேவையை பூர்த்திசெய்வது மிகமுக்கியமான ஒரு வணிகச்சேவைச்செயல்பாடாக அடையாளம் காணப்பட்டது. கு.ப.ராஜகோபாலனின் அதே வகை எழுத்தின் பல வடிவங்களை நாம் வணிக எழுத்தில் காணலாம். ஆர்வி, எல்லார்வி போன்ற ஆரம்பகால எழுத்தாளர்கள். பி.வி.ஆர், மகரிஷி போன்ற நடுக்கால எழுத்தாளர்கள், இந்துமதி, சிவசங்கரி, பாலகுமாரன் போன்ற சமகால எழுத்தாளர்கள் என வாழையடி வாழையாக இந்த வகை எழுத்தை இன்றுவரை கொண்டுவந்துசேர்த்திருக்கிறார்கள்.

தீவிர இலக்கியத்திலும் இந்த வகை எழுத்தின் தொடர்ச்சி எப்போதும் இருந்தது. கு.ப.ராஜகோபாலனின் சரியான தொடர்ச்சி என்று தி.ஜானகிராமனைச் சொல்லலாம். நுண்தகவல்கள் நிறைந்த அவரது அழகிய நடை, தஞ்சைச்சூழலின் விரிவான சித்தரிப்பு ஆகியவற்றுக்கு அப்பால் அவரது நாவல்களின் பெறுமானம்தான் என்ன? அவை காதலுக்கான தமிழ்மனத்தின் ஏக்கத்தை நுண்ணிய முறையில் தீர்த்துவைக்கும் எழுத்துதானே? தன் மிகச்சிறந்த உரையாடல்கள் மூலம் ஜானகிராமன் திரும்பத்திரும்ப எழுதுவது ஆண் பெண்ணுடன் கொள்ளும் அழகிய நுட்பமான சல்லாபத்தைத்தானே? யோசித்துப்பாருங்கள், ஜானகிராமனின் எழுத்து வழியாக உங்களுக்குள் சில அழகிகளும் அவர்களின் காதலர்களும் மட்டும்தானே நிறுவப்பட்டிருக்கிறார்கள். விவேகமும் ஞானமும் பொருந்திய எத்தனைபேரை அவரால் உருவாக்கமுடிந்திருக்கிறது? அடிப்படை இச்சைகளால் அலைக்கழியும் எந்த ஆன்மாவின் தவிப்பை நமக்குக் காட்டமுடிந்திருக்கிறது?

ஜானகிராமனைக் கொண்டாடி எழுதுபவர்களை நான் எப்போதும் கவனிக்கிறேன். அவர்கள் மீண்டும் மீண்டும் அந்த தித்திப்பைத்தான் சப்புகொட்டுகிறார்கள். உலகமெங்கும் மகத்தான எழுத்தின் ஆதாரமாக உள்ள அறவுணர்ச்சியும் சரி ஆன்மீக எழுச்சியும் சரி அவரது நாவல்களில் மிகக்குறைவு என்பதை அவர்கள் உணர்வதேயில்லை. ஜானகிராமனை இலக்கியச்சாதனையாளராக ஆக்குபவை அவரது சிறுகதைகள்தான். அவற்றில் அவர் நீதியின் சீற்றமும் மெய்யறிதலும் கொண்ட மகத்தான தருணங்களை புனைந்திருக்கிறார். பரதேசி வந்தான் அல்லது கடன் தீர்ந்தது அல்லது பாயசம் அல்லது மாப்பிள்ளைத்தோழன் போன்ற கதைகளை எழுதிய ஜானகிராமனையே நான் நவீன இலக்கியவாதியாக நினைக்கிறேன்.

நீண்ட இடைவேளைக்குப்பின் நான் ஜானகிராமனின் இருநாவல்களை வாசித்தேன். மோகமுள் மற்றும் அன்பே ஆருயிரே. என்ன இது இத்தனை வளவளவென்று போகிறது என்ற எண்ணம் ஏற்பட்டது. இப்போது என் வாசிப்பு மாறிவிட்டதா என்ன? இல்லை, நான் வளர்ந்துவிட்டேன். நான் அவற்றை முதலில் வாசிக்கையில் என் வயது பதினேழு. அன்று அவற்றில் என்னைக்கவர்ந்தவை ஜிலுஜிலுவென ஓடும் உரையாடல்கள். ஆம், சல்லாபங்கள். சுற்றி சுற்றிப் பேசும் பெண்களின் சமத்காரங்கள், ஜாலங்கள். இன்று அவற்றை என்னால் தாங்கிக்கொள்ளவே முடியவில்லை. பேசிக்கொண்டே இருக்கிறார்கள். உண்மையிலேயே மக்கள் அப்படித்தான் பேசுகிறார்கள் என்றால்கூட அதற்கு இலக்கியமதிப்பென ஏதுமில்லை. ஓர் இலக்கிய ஆக்கத்தில் சொல்லப்படும் அனைத்துச் சொல்லுமே முக்கியமானவை. சாரமற்ற உரையாடல்களுக்கு நல்ல இலக்கியத்தில் இடமில்லை. அது முன்வைக்கவேண்டியது உண்மையை அல்ல, செறிவுபடுத்தப்பட்ட உண்மையை, அல்லது அதிஉண்மையை.

அவற்றை நான் ரசித்திருந்த அந்தக்காலத்தில் இருவர் என்னிடம் அதைச் சொல்லியிருக்கிறார்கள். மிகச்சிறந்த வாசகியான என் அம்மா ‘ஜானகிராமன் முதிரா ஆண்களுக்கான எழுத்தாளார்’ என்று சொன்னார். பின்னர் சுந்தர ராமசாமி ‘அவரோடது ஒரு ஜிலுஜிலுப்பு. காஞ்சிப் பட்டை மூஞ்சிமேல போட்டு இழுக்கிறது மாதிரி.... ஆனா அதுக்கு இலக்கியத்தில மதிப்பில்ல. எப்படிப்பட்ட பாறாங்கல்லா இருந்தாலும் உண்மைக்குத்தான் இங்க மதிப்பு’ என்றார். ஜானகிராமனின் நாவல்களில் அவைசென்றுசேரும் உண்மையின் தருணங்கள் உள்ளன. திரைவிலக்கி வெளிப்படும் மனித

மனத்தின் ஆழங்கள் உள்ளன. ஆனால் அவை அந்த பகற்கனவின் ஜீராவால் மூழ்கடிக்கப்பட்டுள்ளன. இன்று அந்நாவல்களை இருபக்கமும் கையை வைத்து இறுக்கிப்பிழிந்து சாராம்சத்தை மட்டும் எடுக்கமாட்டோமா என்றிருக்கிறது.

லா.ச.ராமாமிருதத்தின் கடைசிக்கால சிறுகதை ஒன்றில் ஒரு பெண் கதைசொல்லியான முதியவரை முத்தமிட்டுச்செல்வதாக எழுதியிருந்தார். தினமணிக்கதிரில் அக்கதையை வாசித்த சுந்தர ராமசாமி சிரித்துக்கொண்டே சொன்னார் 'முன்னாடின்னா இந்த முத்தம் வந்திருக்காது,.. அதுக்கான ஏக்கம் மட்டும்தான் இருக்கும். பரவாயில்லை, நாற்பது அம்பது வருசம் எழுதி இந்த இடம் வரை வந்து சேர்ந்துட்டார்.' மீபொருண்மைத்தளம் சார்ந்த அதீதகற்பனைகளாலும் மன உணர்ச்சிகளை நேரடியாகத் தொட எழும் மொழியாலும் லா.ச.ராமாமிருதத்தின் கதைகளில் பல இலக்கியச்சாதனைகள். ஆனால் அவரது எழுத்திலும் சாராம்சமாக ஓடிக்கொண்டிருப்பது கு.ப.ராவையும் மௌனியையும் ஆட்டிப்படைத்த அந்த ஏக்கம் மட்டும்தானே?

அடுத்த தலைமுறையில் இந்த பகற்கனவு எழுத்து இன்னும் சல்லிசாக ஆகிவிட்டதோ என்றுதான் ஐயப்படவேண்டியிருக்கிறது. சமீபத்தில் வண்ணநிலவனின் இரு நாவல்களை மீண்டும் வாசித்தேன். கடல்புரத்தில், கம்பாநதி. ஒருவகையான அற்பப்புனைவுகள் என்றுதான் சொல்லவேண்டும். ஆனால் அவை ஒருகாலத்தில் இங்கே இலக்கியச்சூழலில் சப்புகொட்டி ரசிக்கப்பட்டிருக்கின்றன நினைக்கையில் ஆச்சரியமே எழுகிறது. முன்னோடிகளின் எழுத்தில் அவர்களின் மொழித்தேர்ச்சியாலும் நுணுக்கமான மானுட அக அவதானிப்புகளாலும் கலையாக ஆன காமம்சார்ந்த பகற்கனவுத்தளம் இவர்களின் சில்லறை அனுபவங்களும் சூம்பிப்போன அழகுணர்வும் கொண்ட எழுத்துலகில் ஒருவகை சிறுமையெழுத்தாக நின்றுவிட்டிருக்கிறது. கள்ள உறவுகளைக் கண்காணிக்கும் ஓரக்கண் பார்வையாக அதை மாற்றிக்கொள்வதன் மூலமே அவர்கள் சுவாரசியத்தை தக்கவைத்துக்கொண்டிருந்திருக்கிறார்கள். உள்ளே செல்லாமல் தெருவில் நின்று பாதி திறந்த சன்னல் வழியாகப்பார்த்துவிட்டு கடந்துசெல்லும் எழுத்துக்கள் இவை.

அதிருஷ்டவசமாக இந்த ஜீரா இலக்கியச்சூழலில் எப்போதும் உரிய இடத்தில் வைக்கப்பட்டது. முதல்தலைமுறையில் புதுமைப்பித்தன் மட்டும் இந்தவகை பகற்கனவு எழுத்தை சமன் செய்தார். அடுத்த தலைமுறையில் சுந்தர ராமசாமியும் அசோகமித்திரனும் ப.சிங்காரமும் கி ராஜநாராயணனும் கு.அழகிரிசாமியும் ஜி.நாகராஜனும் பலகோணங்களில் இப்பகற்கனவுகளை உடைத்துத் திறந்து பரிசீலிப்பவர்களாக இருந்தனர். அடுத்த தலைமுறையில் நீதி உணர்ச்சியுடன் பேசிய நாஞ்சில்நாடனும் அடித்தள மக்களின் குரலாக எழுந்த பூமணியும் அதை முன்னெடுத்தனர். தமிழிலக்கியத்தின் மையப்பெருங்குரல் புதுமைப்பித்தனிடமிருந்து மேலெழுந்தது நம் நல்லூழ்தான்.

மிக ஆர்வமூட்டும் ஒரு அவதானிப்பை நான் அடைந்தது புதுமைப்பித்தனின் வாசிப்புப்பழக்கம் பற்றி தொ.மு.சி.ரகுநாதன் சொன்னதைக் கேட்டபோது. புதுமைப்பித்தன் ஆங்கிலப்பாலியல் நூல்களை வாசிப்பதில் பேரார்வம் கொண்டிருந்தார். அவரே தமிழில் ஒன்று எழுதவும் செய்தார். அதை நண்பர்களிடம் தனிச்சுற்றுக்கு விட்டார். அதைப்பற்றி அவரது நண்பரான மீ.ப.சோமு சங்கடம் கொண்டபோது 'தமிழனுக்கும் போர்னோகிராஃபி வேணுமே ஓய்' என்று சொல்லி சிரித்தார். புதுமைப்பித்தனின் விபரீத ஆசை போன்ற கதைகளில் கு..ப.ராஜகோபாலனும் வழிவந்தவர்களும் தொடக்கூட அஞ்சும் பாலியல்சித்தரிப்பு உள்ளது. அதாவது புனைவுக்குத்தேவை என்றால் எதையும் சொல்ல புதுமைப்பித்தனால் முடியும். சும்மா தொலைவில் நின்று சப்புக்கொட்டுவது அவருக்கு உடன்பாடல்ல,

தமிழில் புதுமைப்பித்தனின் காலகட்டத்தில்தான் பாலியல் எழுத்து அறிமுகமாகிறது – வாசிப்பு தொடங்கும் காலகட்டமும் அதுவே. லண்டனில் அச்சாகும் பாலியல் நூல்களை இறக்குமதிசெய்து தபால் வழியாக அனுப்பி விற்கும் தொழில் இருபதுகளில் தமிழில் ஆரம்பித்தது. சில ஆண்டுகளிலேயே அது மிகப்பெரிய தொழிலாக மாறியது. ஆனந்தவிகடன் இதழின் அதிபர் எஸ்.எஸ்.வாசன் அந்தத் தொழிலில் மிகப்பெரிய வெற்றியை அடைந்தபின்னர்தான் ஆனந்த விகடனை தொடங்கினார். அவரே பின்னர் தமிழில் அத்தகைய பல நூல்களை எழுதியுமிருக்கிறார். அவற்றை அன்றைய கணக்கில் மிகப்பெரும் பணம் செலவுசெய்து வாங்கியவர்களை நம்மால் ஊகிக்கமுடியும். மரபின் கட்டுப்பாடுகளுக்கு ஒருபக்கம் ஆட்பட்டு மறுபக்கம் புதிய ஆங்கிலக் கல்வியால் வெளியுலகையும் அறிய நேரிட்டு

அந்த இக்கட்டால் கடுமையான பாலியல் வறட்சிக்கு ஆளான படித்த நடுத்தரவர்க்கத்தினர்தான்.

பின்னர் தமிழில் பாலியல் எழுத்து எப்போதும் இருந்துள்ளது. பிரபலமான சரோஜாதேவி வரிசை கீழ்மை எழுத்துக்களை பள்ளிவாழ்க்கையின் ஒரு கட்டத்தில் அனைவருமே வாசித்து வந்திருப்பார்கள். எண்பதுகள் அந்த தளத்தில் பெரிய அலை நிகழ்ந்த காலகட்டம். ஒளிநாடா மூலம் வீட்டிலேயே சினிமா பார்க்கமுடியுமென்ற தொழில்நுட்ப வளர்ச்சி வந்ததும் நீலப்படங்கள் சாதாரணமாக ஆயின. அதன்பின் தொண்ணூறுகளின் இறுதியில் இணையம் நீலப்படங்களை எங்கும் கிடைப்பதாக ஆக்கியது. எல்லாவகையான நீலப்படங்களையும் பார்க்கமுடிந்தது. ஓரளவு கற்பனையும் வாசிப்பும் கொண்டவர்களுக்கு பாலியலெழுத்தும் காட்சிகளும் மிகமிக விரைவிலேயே சலித்துப்போயின.

இன்று தமிழில் ஒரு சிறுசாரார் இணையதளங்களில் அவர்கள் பார்க்கும் பாலியல்காட்சிகளை முதிர்ச்சியற்ற சொற்களில் திரும்பப்புனைந்து இலக்கியம் என முன்வைத்துவருகிறார்கள். கொஞ்சமேனும் வாசிப்புப்பழக்கமும் அதன் விளைவான முதிர்ச்சியும் கொண்டவர்களுக்கு இவை அசட்டுத்தனமாகவே தெரியும். ஆனால் இன்றும்கூட கு.ப.ராஜகோபாலனின் எழுத்தில் இருந்து இன்பக்கிளுகிளுப்பைப் பெற்றுக்கொண்டவர்களின் வாரிசுகள் அதே மனநிலையின் வளர்ந்தவடிவில் நீடிக்கிறார்கள். பெரும்பாலும் கட்டுப்பாடுகள் நிறைந்த நடுத்தரக்குடும்பங்களில் இருந்து தொழில்கல்விகற்று பொதுவெளிக்கு வந்த ஒருவகை அசட்டு இளைஞர்கள் இவர்கள். பாலியல்மீறல்களை ஏதோ பெரிய சமூகப்புரட்சி என நினைத்து உத்வேகம் கொள்கிறார்கள். தங்கள் வீடுகளில் பேசிக்கொள்ள முடியாத ஒரு விஷயத்தை கதையில் வாசித்தால் மயிர்கூச்செறியும் முதிராமனங்கள். கொஞ்சம் தெருவில் நடந்து நான்கு குடிசைப்பகுதிகளைச் சுற்றிவரக்கூட சுதந்திரமில்லாத எளிய வாழ்க்கை வாழ்பவர்கள்.

இவர்களுக்காக எழுதப்படும் இன்றைய மென்பாலியல் எழுத்துக்களையும் நான் கு.ப.ரா மரபின் வரிசையில்தான் சேர்ப்பேன். எழுபதாண்டுகளுக்கு முன் கு.ப.ராவின் விஸ்வேஸ்வரன் கும்பகோணம் அக்ரஹாரத்தில் அடுத்தவன் மனைவியை ஆறடி தூரத்தில் தனியாகப்பார்த்து அடைந்த கிளர்ச்சியைத்தான் இவர்களின் புனைவுகளில் விஸ்வா ஹாங்காங்குக்கு

போய் சான்ட்விச் மஸாஜைப் பற்றி கேள்விப்பட்டு அடைகிறான். என்றுமுள நந்தமிழ் ஏக்கம்!

என்னுடைய தலைமுறையின் எல்லா எழுத்தாளர்களும் கு.ப..ராஜகோபாலன் உருவாக்கிய மனச்சிக்கலை முழுமையாகத் தாண்டிவந்தவர்கள் என்பதை ஆச்சரியத்துடன் காண்கிறேன். அந்த மாற்றம் எப்படி நிகழ்ந்தது? இளமையில் நாங்களெல்லாருமே இந்த பகற்கனவை மாந்திக்களித்தவர்கள்தான். இதல்ல எழுத்து என எங்கோ உணர்ந்தோமா? வரலாறாக விரியாத ஒன்றை, உள்ளும் புறமும் கண்ணிகளாக வளராத ஒன்றை அற்ப எழுத்து என்று அறிந்தது என்னை இவர்களிடமிருந்து விடுதலை செய்தது. நான் அதற்கு தல்ஸ்தோய்க்கும் தஸ்தயேவ்ஸ்கிக்கும் பஷீருக்கும் புதுமைப்பித்தனுக்கும் கடமைப்பட்டிருக்கிறேன்.

இன்றைய எழுத்தில் நேரடியான ஆய்வுநோக்குடன் அல்லது நுணுக்கமான அங்கதத்துடன் அல்லது விரிவான வரலாற்றுப்பார்வையுடன் ஆண்பெண்ணுறவைப் பார்க்கும் பார்வை நிகழ்ந்திருப்பது ஓர் இலக்கியச் சாதனை என்று ஐயமில்லாமல் சொல்ல முடியும். கோணங்கி, சுரேஷ்குமார இந்திரஜித், யுவன் சந்திரசேகர், எஸ்.ராமகிருஷ்ணன், பெருமாள்முருகன் என ஒவ்வொரு புனைகதையாளரும் ஒவ்வொரு வகையில் அதைக் கையாள்கிறார்கள். ஓரக்கண்பார்வையின் அற்பத்தனம் கொண்ட எழுத்தாளர் என எவருமில்லை.

இன்றைய இளம் எழுத்தாளர்களில் ஆண்பெண் உறவை எழுதுபவர்களில் முக்கியமானவர்களான வா..மு.கோமு, கீரனூர் ஜாகீர் ராஜா, எஸ்.செந்தில்குமார், லட்சுமி சரவணக்குமார், சந்திரா என அனைவரிலும் உள்ளது இந்த விடுதலை அளிக்கும் அழகுகளும் சிக்கல்களும் என்று சொல்லமுடியும். குறிப்பாக வா.மு.கோமு அப்பட்டமான பாலியலெழுத்தின் உதாரணமாகச் சொல்லப்படக்கூடியவர். ஆனால் அது பாலியல் மீதான ரகசிய அரிப்பாக அல்ல, அதை ஒரு மானுட நிலைமையாகக் கண்டு ஆராயும் கூர்மையாகவே அவரில் வெளிப்படுகிறது. கு.ப.ராஜகோபாலன் முதல் வா.மு.கோமு வரையிலான ஒரு கோடு சென்ற முக்கால் நூற்றாண்டில் நம் அகம் வளர்ந்து வந்ததன் வரைபடமாக அமையும்.

# (8) இரு அகழிகள்

இந்தியவரலாற்றை மேலோட்டமாக வாசிப்பவர்கள் கூட ஒரு ஆச்சரியமான விஷயத்தை கண்டுகொள்ள முடியும். இந்தியவரலாற்றாய்வில் மிகப்பெரும்பகுதி ஒரு குறிப்பிட்ட தளத்தில்தான் நடக்கிறது. இன்றுவரை விளக்க முடியாத ஒரு பெரிய இடைவெளியை விளக்குவதற்காக!

அதை இந்தியவ்ரலாற்றின் மிகப்பெரிய அகழி என்று சொல்லலாம். அந்த ஆழமான பள்ளத்தில்தான் பல்லாயிரக்கணக்கான நூல்களும் கொள்கைகளும் கொட்டப்பட்டுக்கொண்டே இருக்கின்றன. இந்தக்கணத்தில்கூட ஆயிரக்கணக்கான அறிஞர்கள் அதைச்சார்ந்து அதிஉக்கிரமான விவாதங்களில் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் இதுவரை பெரியதாக ஒன்றும் நிகழவில்லை

இந்தியநிலப்பரப்பில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள ஹரப்பன் நகர நாகரீகங்களுக்கும் அதற்குப்பின்னர் இந்தியாவில் உருவாகி வளர்ந்து வந்து இன்றும் நீடிக்கும் இந்திய வரலாற்றுக்கும் இடையே உள்ள இடைவெளிதான் அது.

நினைக்கவே வியப்பு அளிப்பது இந்த விஷயம். 1922 ல் சிந்து நதிக்கரையில் மொகஞ்சதாரோ ஹரப்பா நகரங்கள் அகழ்வாய்வுசெய்யப்பட்டபோது அதை சிந்துசமவெளி நாகரீகம் என்று சொன்னார்கள். ஆனால் அடுத்த ஐம்பதாண்டுகளுக்குள் சிந்து சமவெளியில் மட்டுமல்லாமல் ராஜஸ்தான் பாலைநிலத்திலும் குஜராத் கட்ச் பகுதியிலும் ஏராளமான ஹரப்பா காலகட்டத்து நாகரீகங்கள் அகழ்வாய்வுசெய்யப்பட்டபடியே உள்ளன. இவற்றை பொதுவாக இன்று ஹரப்பன் நாகரீக நகரங்கள் என்று சொல்கிறார்கள். லோத்தல், டோலாவீரா, காளிஃபங்கன் போன்ற நகரங்கள் பெரியவை. சென்ற சிலமாதங்களுக்கு முன்னர்கூட ராஜஸ்தானில் ஓர் நகரம் அடையாளம் காணப்பட்டுள்ளது

மிகப்பெரிய நாகரீகம் இது. பல நகரங்கள், துறைமுகங்கள், கனிச்சுரங்கங்கள், உள்நாட்டுப்படகுவழிகள், சாலைகள்....ஆனால் பல்லாயிரம் சதுரகிலோமீட்ட பரப்பில் விரிந்து பல ஆயிரம் வருடம் நீடித்த அந்த மாபெரும் நாகரீகம் உருவாக்கிய ஒரு நூல் கூட நம்மிடம் இல்லை.

அந்நாகரீகத்தின் மொழி நமக்குத்தெரியவில்லை. நகரங்கள் அகழ்வாய்வுசெய்யப்படும்போது வெறுமே தொல்பொருட்கள் மட்டுமே கிடைக்கின்றன. அவற்றைக்கொண்டு நாம் அவர்களைப்பற்றி குத்துமதிப்பான ஊகங்களை மட்டுமே செய்யமுடிகிறது. அவை இரும்பு கண்டுபிடிக்கப்படுவதற்கு முந்தைய வெண்கலக்காலத்தைச் சேர்ந்தவை என்பது மட்டுமே உறுதியாகச் சொல்லக்கூடியதாக உள்ளது.

இந்த நகரநாகரீகத்திலிருந்து மாறுபட்ட நாகரீகமே வேதகால நாகரீகம். அது உபநிடதகாலமாக வளர்ந்தது. பதினாறு ஜனபதங்களாக மலர்ந்து ஐம்பத்தாறு மன்னர்களால் ஆளப்பட்ட பாரதவர்ஷமாக ஆகியது. மகதம் உள்ளிட்ட மாபெரும் பேரரசுகளை உருவாக்கியது. இந்தியாவில் இன்றுவரை நீளும் ஒரு வரலாற்றுப்பண்பாட்டு நீட்சி என்று வேதகால நாகரீகத்தைச் சொல்லலாம். ஆனால் வேதகாலத்தைச்சேர்ந்த தொல்பொருட்சான்றுகள் அனேகமாக ஏதும் கிடைக்கவில்லை! வேதசம்ஹிதைகள், பிராமணங்கள், ஆரண்யகங்கள் என ஏராளமான நூல்கள் கிடைக்கின்றன. தொல்பொருட்சான்றுகள் இல்லாத காரணத்தால் இந்நூல்களைக் குத்துமதிப்பாகவே புரிந்துகொள்ளமுடிகிறது!

இந்த விசித்திரமான வரலாற்று இடைவெளியில்தான் ஏராளமான ஊகங்கள் நிகழ்கின்றன. மொகஞ்சதாரோ ஹரப்பா நாகரீகத்தை அகழ்ந்தெடுத்த மார்ட்டிமர் வீலர் காலம் முதல் இன்று ஐராவதம் மகாதேவன் காலம் வரை எவ்வளவோ கொள்கைகள் முன்வைக்கப்பட்டுள்ளன. ஆனாலும் சிந்துசமவெளி சித்திர எழுத்துக்கள் இன்னும்கூட வாசிக்கப்படவில்லை. அவற்றுக்கும் வேதகாலத்துமான தொடர்பு உறுதியாக விளக்கப்படவில்லை.

தொன்மையான பலநாகரீகங்களுக்கு இந்த இடற்பாடு இல்லை என்பதை நாம் கவனிக்கவேண்டும். சுமேரியர்காலத்து களிமண்பலகை எழுத்துக்களும் எகிப்தியப் பாறைவெட்டு எழுத்துக்களும் மாயன்நாகரீகத்தின் எழுத்துருக்களும் எல்லாம் ஆய்வாளர்களால் வாசிக்கப்பட்டுள்ளன. இந்த் நிலை இந்திய வரலாற்றின் நடுவே ஒரு பெரும் புதிரை நிலைநிறுத்துகிறது இதிலிருந்தே இங்குள்ள பெரும்பாலான வரலாற்றுச்சிக்கல்கள் ஆரம்பிக்கின்றன. அவை அரசியல்களத்திலும் சிக்கல்களை உருவாக்குகின்றன.

1920 களில் மொகஞ்சதாரோ ஹரப்பா நாகரீகம் கண்டடையப்பட்டது இந்தியா முழுக்க ஒருவகை உற்சாகத்தை அரசியல்களத்தில் உருவாக்கியது. ஒரு தொல்லியல் கண்டுபிடிப்பு அடுத்த ஒருநூறாண்டுக்காலம் நீடிக்கும் அரசியல் கொள்கைகளை உருவாக்குமென்பது வியப்புக்குரியதுதான். இத்தகைய நிகழ்வுக்கு வேறெங்கும் முன்னுதாரணம் உண்டா என்று தெரியவில்லை. இன்றும் தமிழகத்தில் தீவிரமாகவும் தென்னகம் முழுக்க பரவலாகவும் நீடிக்கும் ஆரிய -திராவிடவாத அரசியலின் அடித்தளம் அப்போது உருவானதே.

மொகஞ்சதாரோ ஹரப்பா நாகரீகம் கண்டடைவதற்கு முன்னரே ஐரோப்பிய அறிஞர்கள் வேதங்களின் தொன்மையை மொழியியல் ஆய்வுகள் மூலம் ஆய்வுலகில் நிறுவிவிட்டிருந்தனர். வேதநாகரீகம் ஆரியர்களுடையது என்ற எண்ணத்தையும் உருவாக்கியிருந்தனர். ஆரிய என்ற சொல்லை ஐரோப்பியர் ஒரு மொழியடையாளமாக அல்லாமல் இன அடையாளமாக விளங்கிக்கொண்டனர். அது அவர்களுக்கு பலவகையிலும் உதவியாக இருந்தது. முக்கியமாக ஜெர்மானிய அறிஞர்களுக்கு.

மத்திய ஆசியாவை மையமாகக் கொண்டு ஒரு விரிவான இனப்பரவல் சித்திரத்தை அந்த ஐரோப்பிய அறிஞர்கள் உருவாக்கிக்கொண்டனர். அந்த இனப்பரவல் கோட்பாடு மூலம் தங்களை தொன்மையான சுமேரிய, இந்தியப் பண்பாடுகள் அனைத்துடனும் தொடர்புபடுத்திக்கொண்டனர். அதை இனமேன்மைவாதமாக மாற்றிக்கொண்டு உலகநாகரீகமே தாங்கள் உருவாக்கியதுதான் என்று சொல்ல முயன்றனர். அது இனவெறுப்பு அரசியலின் அடித்தளமாக ஆகியது.

இதேகாலகட்டத்தில் ஆரிய மொழிக்குடும்பத்தில் இருந்து வேறுபட்டு தனித்தியங்கக்கூடிய தென்னகமொழிக்குடும்பத்தை எல்லிஸ் போன்ற முன்னோடி ஆய்வாளர்கள் அடையாளம் கண்டுகொண்டனர். அவற்றை சிற்பநூல்கள்,இசைநூல்கள் போன்றவற்றில் பயின்றுவரும் திராவிடம் என்ற சொல்லைக்கொண்டு அடையாளப்படுத்தினர். அவ்வாறாக இந்தியாவில் திராவிட இனவாதம் பிறந்தது.

திராவிடம் என்னும் சொல் கோதாவரிக்கும் பெண்ணைக்கும் நடுவே உள்ள நிலப்பகுதியைக் குறிப்பதற்காகவே நூல்களில் கையாளப்பட்டது. அதாவது வேசரநாட்டுக்கும் தமிழ்நிலங்களுக்கும் நடுவே உள்ள நிலப்பகுதி அது. திராவிடத்துக்கு அதற்குரிய சிற்பமுறையும் இசைமுறையும் உண்டு.

தாந்த்ரீகநூல்கள் அந்நிலத்துக்கான வழிபாட்டுமுறைகளை சுட்டுகின்றன. அது மொழியையோ இனத்தையோ ஒருபோதும் சுட்டவில்லை

கால்டுவெல் என்ற கிறித்தவ மதப்பரப்புநரின் கற்பனைத்திறன் திராவிட என்ற நிலம்சார்ந்த சொல்லை தென்னக மொழிக்குடும்பத்தைச் சுட்ட பயன்படுத்தியது. உடனடியாகவே திராவிடர் தனி இனம் என்றும் அவர்களின் மொழியில் இருந்தே திராவிட மொழிக்குடும்பம் உருவாயிற்று என்றும் கருத்துக்கள் பிறந்தன. இந்தியப்பெருநிலத்தில் பல்லாயிரமாண்டுகளாக நடந்து வரும் ஆரிய இனத்துக்கும் திராவிட இனத்துக்குமான பெரும்போர் முற்றிலும் கற்பனையாகவே உருவாக்கப்பட்டு சிந்தனையில் உறுதியாக நிலைநாட்டப்பட்டது. ஆரியர்கள் வெண்ணிறமானவர்கள் திராவிடர்கள் கறுப்பானவர்கள் என்பதுபோன்ற இன அடையாளங்களும் கற்பிதம்செய்யப்பட்டன.

இந்திய சுதந்திரப்போரின் இரண்டாம் படிநிலையில் வெள்ளைய ஆட்சி மாகாணஅரசுகளை அமைக்க தேர்தல்களை நடத்த ஆரம்பித்தபோது இந்தியாவெங்கும் அதிகார அரசியல் தலைதூக்கியது. தேர்தல்களில் போட்டியிட்டு லாபமடைய செல்வந்தர்கள் முண்டியடித்தனர். ஒவ்வொரு இனக்குழுவும் வட்டாரமும் தன் தனியடையாளத்தை வரையறை செய்து அதைக்கொண்டு அரசியல் குழுக்களை உருவாக்க முயன்றது. இந்தியா முழுக்க மொழிசார்ந்தும் வட்டாரம்சார்ந்தும் சாதிசார்ந்தும் பிரிவினையரசியல் தலைதூக்கியது. அந்த அரசியல் ஆரிய திராவிட இனப்பிரிவினையை ஒரு வலுவான ஆயுதமாகக் கண்டடைந்தது. அவ்வாறுதான் திராவிட அரசியல் பிறந்தது.

தொடர்ந்து அரைகுறை வரலாற்றுத்தகவல்கள் மற்றும் கட்டுக்கடங்காத ஊகங்கள் வழியாக எழுதி எழுதி பரப்பப்பட்டது திராவிட அரசியல். அன்றிருந்த அனைத்து கற்பனைக்கான சாத்தியக்கூறுகளையும் அது பயன்படுத்திக்கொண்டது. அதில் எந்த வரலாற்று அளவுகோல்களையும் அது கணக்கில்கொள்ளவில்லை. கால்டுவெல் முன்வைத்த மொழிவழி திராவிட அடையாளத்தை மிக எளிதாக இனத்தைச் சார்ந்ததாக அது மாற்றிக்கொண்டது. அதேபோலவே எந்த விவாதமும் இல்லாமல் திராவிடர்கள் என்றால் தமிழர்கள் என்று அடுத்தகட்டத்தில் சொல்ல ஆரம்பித்தது

பெரும்பாலும் அரைகுறை வரலாற்றுத்தரவுகளைக்கொண்டு அபத்தமான கற்பனையால் கட்டமைக்கப்பட்ட ஜெர்மானிய ஃபாசிச ஆரியவாதத்தை நேர் எதிர்முனையில் திராவிடவாதமாக திராவிட அரசியல் நகலெடுத்தது. ஒருபக்கம் அது நாத்திகம் பேசியது. ஆனால் கட்டுக்களற்ற மிகைநம்பிக்கையாளர்களான தியாசஃபிகல் சொசைட்டியினரிடமிருந்து அவர்கள் கண்மூடித்தனமான உள்ளுணர்வால் கண்டுபிடித்ததாகச் சொல்லப்பட்ட லெமூரியா கண்டம் போன்ற கருதுகோள்களை கடன் வாங்கி தன் அறிவியல் அடிப்படைகளாக முன்வைத்தது.

இவ்வாறு மெல்லமெல்ல பிரிவினை நோக்கு கொண்ட நூற்றுக்கணக்கான அறிஞர்களால் பேசிப்பேசி உருவாக்கப்பட்ட திராவிட இயக்க அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றியபின்னர் தன் பேச்சுகளுக்கு அடிப்படையாக ஒரு பொய்யான கருத்தியல் அடித்தளத்தையும் வரலாற்று அடித்தளத்தையும் கல்விப்புலம் சார்ந்து உருவாக்கிக்கொண்டது. அதை உறுதியாக நம் பொதுச்சிந்தனையில் நிலைநாட்டியது. அதற்கு எந்த வகையான வரலாற்றுப்பின்புலமும் இல்லை என்பதையோ இன்றைய அறிவுத்தளத்தில் முழுமையாகவே ஆதாரமற்றுப்போன ஓர் ஊகம் அது என்பதையோ சொல்வதே தமிழ்த்துரோகம் இனத்துரோகம் என்பதுபோல ஓர் கெடுபிடிநிலையும் கட்டமைக்கப்பட்டுள்ளது

இந்த அரசியலை உருவாக்க உதவியது இங்கே உள்ள இன்னொரு அகழி என்பது வியப்பளிப்பது. உண்மையில் ஒரே புதிரின் இன்னொரு முகம்தான் அது. தமிழ்வரலாற்றில் ராபர்ட் புரூஸ் ஃபூட் கண்டுபிடித்த கற்கருவிகளை கையாண்ட பழைய கற்கால மனிதர்கள் வாழ்ந்திருக்கிறார்கள். அவர்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகப் பரிணாமம் அடைந்து வந்திருக்கிறார்கள். மறையூரிலும் கொடுமணலிலும் பெருங்கற்களை நாட்டியிருக்கிறார்கள். கருக்கியூரிலும் கீழ்வாலையிலும் குகை ஓவியங்களை வரைந்திருக்கிறார்கள்

ஏறத்தாழ மூன்றுலட்சம் வருடங்களுக்கு முன்னாலிருந்து ஆரம்பிக்கும் இந்த வரலாறு அப்படியே கிமு இரண்டாயிரம் முதல் கிமு ஐநூறு வரையிலான காலகட்டத்தைச்சேர்ந்த உலோகக்காலகட்டத்து நகரங்களின் வரலாற்றை வந்தடைகிறது.. அந்த நாகரீகம் அன்று இந்தியப்பெருநிலம் முழுக்க இருந்த

நூற்றுக்கணக்கான புராதன நகரநாகரீகங்களுடன் தொடர்புகொண்டு வளர்ந்தது வந்ததாகும்.

ஆதிச்சநல்லூர் , கொடுமணல் போன்ற புராதன நாகரீக எச்சங்கள் தமிழகத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவை வெண்கலக்காலத்தில் இருந்து இரும்புக்காலகட்டம் வரை நீடித்தவை. ஏராளமான தொல்பொருட்சான்றுகள் அங்கே நமக்குக் கிடைக்கின்றன. உலோகப்பொருட்கள் களிமண்பொருட்கள் கிடைத்துள்ளன. பானைக்கீறல் எழுத்துக்கள் கண்டடையப்பட்டுள்ளன. ஆதிச்சநல்லூரில் அதற்குப்பின்னர் உருவாகி வந்த தமிழ்ப்பண்பாடு, தமிழ்எழுத்துரு ஆகியவற்றுக்கான தெளிவான முதற்கட்ட ஆதாரங்களும் உள்ளன. அவை கிமு ஐநூறுகளைச் சேர்ந்தவை

ஆனால் ஆதிச்சநல்லூர் உட்பட நம்முடைய உலோகக் காலகட்டத்து நகரநாகரீகத்தைச்செர்ந்த எந்த ஒரு எழுத்துவடிவ ஆதாரமும் நமக்குக் கிடைக்கவில்லை. அவர்களின் பானைகளில் உள்ள கீறலெழுத்துக்களை நாம் முழுமையாக வாசிக்கமுடியவில்லை. நமக்குக்கிடைக்கும் புராதன சங்கநூல்களைக்கூட ஆதிச்சநல்லூரின் நாகரீகத்துடன் தொடர்புபடுத்த முடியவில்லை. அதாவது அவற்றுக்கு இலக்கிய ஆதாரங்களே இல்லை. அந்தக்காலத்தை அறிய அந்த தொல்பொருட்களைக்கொண்டு ஊகங்களை நிகழ்த்துவதன்றி வேறு வழியே இல்லை.

ஆனால் அதற்கடுத்த காலகட்டத்தைப்பற்றி நமக்கு பெரிய எழுத்துவடிவ ஆதாரங்களின் பெரிய தொகுப்பே கிடைத்துள்ளது. அதைத்தான் நாம் சங்க இலக்கியம் என்கிறோம். ஆனால் சங்க இலக்கியம் காட்டும் வாழ்க்கையைப்பற்றி விரிவாக ஆராய்வதற்குரிய தொல்பொருட்சான்றுகள் கிடைக்கவில்லை. மிகச்சமீப காலம்வரைக்கும்கூட சங்ககாலம் என்பதே ஆறாம்நூற்றாண்டில் பல்லவர்களின் காலகட்டத்தில் சில புலவர்களால் கற்பனையாக உருவாக்கப்பட்டதுதான் என்று சொல்லும் ஆய்வுத்தரப்புகள் இருந்தன

சென்ற முப்பதாண்டுக்காலகட்டத்தில்தான் சங்ககால மன்னர்களின் சில கல்வெட்டுகளும் ஒருசில உலோகச்சின்னங்களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன, அவை சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் வரலாற்றுக்காலகட்டம் ஒன்று இருந்தது எனபதற்கான ஆதாரங்களாக உள்ளன. ஆனால் . இன்றும்கூட சங்க இலக்கியம் அளிக்கும் விரிவான

சமூகவாழ்க்கையையும் அரசியல்சூழலையும் முழுமையாக விளங்கிக்கொள்ள உதவக்கூடிய அளவில் தொல்லியல்சான்றுகள் கிடைக்கவில்லை. சங்ககாலத்து பெருமன்னர்களைப்பற்றிய தொல்லியல்சான்றுகளே இல்லை. சங்ககால நகரங்களான மதுரை ,பூம்புகார் , கொற்கை, கருவூர்வஞ்சி எவையும் அகழ்வாய்வில் கண்டுபிடிக்கப்படவில்லை.

இபப்டிக்கேட்டுக்கொள்ளலாம். கருக்கியுரின் குகை ஓவியங்களையும் மறையூரின் பெரும் குடைக்கற்களையும் ஆதிச்சநல்லூரின் முதுமக்கள்தாழிகளையும் உருவாக்கிய முன்னோடிகளுக்கும் சங்கப்பாடல்களுக்கும் உள்ள உறவு என்ன? இன்றுவரை அதற்கு தெளிவான பதில் கிடையாது.அதாவது தொல்பொருட்களுக்கு இலக்கிய ஆதாரமில்லை. இலக்கியங்களுக்கு தொல்லியல் ஆதாரங்கள் இல்லை. இந்தப்புதிர் தமிழக வரலாற்றில் இன்றும் பிரம்மாண்டமாக எழுந்து நிற்கிறது. கண்முன் திறந்து கிடக்கும் இந்த அகழியை ஆதாரங்களால் நிரப்ப முடியவில்லை. ஆகவே ஊகங்களாலும் கொள்கைகளாலும் நிரப்ப தொடர்ந்து முயல்கிறார்கள்.

அங்கேதான் அரசியல் நுழைகிறது. சிந்துசமவெளி ஆய்வுகள் அரையும்குறையுமாக வெளிவர ஆரம்பித்த காலகட்டத்தில் அன்றைய அரசியலுக்காக உருவாக்கப்பட்ட இனவாதக் கொள்கைகளை கைவிடமுடியாமல் அதில் தொங்கிக்கொண்டு இந்த இடைவெளியையும் அதைக்கொண்டே நிரப்ப முயல்கிறார்கள். பேரறிஞர்கள் என்பவர்கள்கூட எளிமையான அரசியல்சார்ந்த ஒற்றைவரிகளுக்குள் சிக்கிக்கொண்டு உழல்கிறார்கள். ஆதாரங்களை திரித்துச்சொல்லக்கூட துணிகிறார்கள். சமீபத்தில் ஆதிச்சநல்லூர் பானைக்கீறலெழுத்துக்களில் தமிழ் இருந்ததாகச் சொல்லப்பட்டது அப்படிப்பட்ட ஒரு கற்பனைத்தாவல் என்று ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டியிருக்கிறார்கள்.

இப்போதைக்கு இப்படி வைத்துக்கொள்வோம். ஆதிச்ச்நல்லூர் வரை வந்துசேரும் வரலாறு என்பது ஒரு அத்தியாயம். சங்க காலம் என்பது அடுத்த அத்தியாயம் . இரு அத்தியாயங்கள் நடுவே பெரிய இடைவெளி ஒன்று உள்ளது. அந்த இடைவெளியை நிரப்புவதற்கு சென்றகால அரசியல் உருவாக்கிய முன்முடிவுகளுக்கு அப்பால்செல்லும் புதிய சிந்தனைகள் கொண்ட ஆய்வறிஞர்கள் வந்தாகவேண்டும். இன்றைய அரசியல் சார்ந்தல்லாமல் புறவயமான ஆதாரங்களைத் தேடி எடுத்து, இன்றைய

கோணத்தில் விரிவான வரலாற்றுப் பரிமாணச் சித்திரத்தை உருவாக்கிக்கொண்டு அதை முழுமைசெய்யவேண்டும். நம் முன் உள்ள பெரும் சவால் இது.

******